# பஞ்சாமிர்தம்
## மாலை 1, காசு 10
## தை 1925
## [January / February 1925]

Record no. 524

*Pañcāmirtam*

*Mālai 1, kācu 10*

*Tai 1925*

*[January / February 1925]*

Record no. 524

# பஞ்சாமிர்தம்

ஒரு மாதாந்தரப் பத்திரிகை



நான் ஒரு மானுடன் : நான் மதியாதன
மானுட வாழ்வில் இலை.

மாலை—I | தை—1925 | காசு—10

## இந்தியன் நாஷனல் காங்கிரஸ்
## 39-வது கூட்டம் 1924



### தலைவர் பிரசங்கத்தில் சில பகுதிகள்

மஹாத்மா காந்தி, பெல்காம்



#### 1. ஒத்துழையாமை—பகிஷ்காரங்கள்



லாத்காரமில்லாத ஒத்துழையாமையால் ஜனங்களுக்குத் தங்களுடைய பலம் இன்னதென்று தெரிந்து விட்டது. கஷ்டங்களைப் பாராட்டாமல் அநுபவிக்கத் துணிந்து விட்டால், எதையும் எதிர்க்கும் சக்தி ஜனங்களுக் குண்டாகிவிடு மென்பதை அது வெளிப்படுத்தி விட்டது. வேறெந்த வழியிலும் ஜனங்களுக்குள் உண்டு பண்ண முடியாத கிளர்ச்சியை அது உண்டுபண்ணி யிருக்கிறது. ஆகையால் பலாத்காரமற்ற ஒத்துழையாமையால் நமக்கு ஸ்வராஜ்யம் கிட்டாத போதிலும், வருந்தத்தக்க சில சம்பவங்கள் அதன் பலனாக விளைந்த போதிலும், நாம் பகிஷ்கரிக்கப் பார்த்த ஸ்தாபனங்கள் இன்னும் நடந்து வந்த போதிலும், பலாத்காரமற்ற ஒத்துழையாமையானது ராஜீய விடுதலைக்கு ஒரு சாசுவதமான வழியாக இருந்தே தீரும். நமக்குக் கிடைத்த அரைகுறையான வெற்றி கூட, ஸ்வராஜ்யத்தைத் துரிதப்படுத்தி விட்டதென்பதே என்னுடைய அபிப்பிராயம். ஒரு லட்சியத்துக்காகக் கஷ்டப்

பட நமக்குச் சக்தி யேற்பட்டுவிட்டால், அந்த லட்சியத்தை நோக்கி அபிவிருத்தி யேற்படுவதும் நிச்சயம் என்பதை, எவரும் மறுக்க முடியாது. * * *

ஒத்துழையாதாரைக் காங்கிரஸிலிருந்து வெளியே போகச் சொல்வது எப்படிச் சாத்திய மில்லையோ, அது போல் பஹிஷ்காரத்தில் நம்பிக்கை யில்லாதவர்களை வெருட்டுவதும் சாத்திய மில்லை. இரு கட்சியாரும் காங்கிரஸுக் குள்ளே இருக்க வேண்டியது தான்; ஆனால் பரஸ்பர விரோதம் காட்டிக் கண்டிக்காமலும், ஒருவர் வேலைக்கு மற்றவர் இடையூறு விளைவிக்காமலும், இருந்துவர வேண்டும். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமைக்கு எதெது பொருத்தமோ, அது அது ராஜீயக் கட்சியாரின் ஒற்றுமை விஷயத்திலும் பொருத்தமானது தான். பரஸ்பரம் சகிப்புத் தன்மை காட்ட வேண்டும். ஒருவர் கட்சிக்கு மற்றவர் திரும்பும்வரை, பொறுத்திருப்பதைத் தவிர வேறுவழி யில்லை. இங்ஙனம் நமக்குள் சகிப்புத்தன்மை காட்டுவதோடு நிற்காமல், மிதவாதிகளையும் மற்றவர்களையும் காங்கிரஸில் மறுபடி கொண்டுவந்து சேர்க்க நாம் முயலவேண்டும். * * *

பொதுவாக அன்னியத் துணியை பஹிஷ்கரிக்கிறோமேயன்றி, குறிப்பாக பிரிட்டிஷ் துணிகளை பஹிஷ்கரிக்க வில்லை. இத்தகைய பஹிஷ்காரம் செய்ய நமக்கு உரிமையிருப்பது மாத்திரமன்றி, அங்ஙனம் செய்வது நமது கடமையுமாகும். இந்தியாவிலுள்ள ஆறுகளில் ஓடுகிற ஜலத்திற்குப் பதிலாகச் சீமையிலிருந்து ஜலம் தருவித்து நமது ஆறுகளில் ஓடச் செய்தால், அதைப் பஹிஷ்கரிப்பது எப்படி நம் கடமையோ, அது போல்தான் இந்த அன்னியத் துணி பஹிஷ்காரமும், நமது கடமையாகும். * * *

இலங்காஷயரிலிருந்து பெரும்பாலும் அன்னியத் துணிகள் இறக்குமதி யாகின்றன. எல்லா இறக்குமதிகளையும் விட, அது தான் அதிகம். அடுத்தாற்போல் சர்க்கரையைச் சொல்லலாம். இலங்காஷயர் வியாபாரத்தை உத்தேசித்துத்தான், பிரிட்டிஷாருக்கு இந்தியாவில் விசேஷ சிரத்தை இருக்கிறது. முக்கியமாக விவசாயத்தில் ஈடுபட்ட இந்தியக் குடியானவர்களுக்கு, ஓய்வு காலங்களில் கிடைத்து வந்த ஊதியத்தைக் கெடுத்து, அவர்களை நாசமாக்கியது, அதனால்தான். பாதி நேரத்தைக் குடியானவர்கள் சோம்பேறித் தனமாக இப்பொழுது கழிக்கிறார்கள். குடியானவர்கள் சௌக்கியமாக வாழ வேண்டுமானால், அன்னியத் துணி பஹிஷ்காரம் அவசியமாகும். மலிவாயும் பார்வைக்குப் பளபள வென்றும் இருக்கிற அன்னியத் துணிகளைக் குடியானவர்கள் வாங்கா திருக்கும்படி நாம் சொல்வதோடு, ஓய்வு வேளைகளில் பஞ்சடித்துப் பட்டைபோடவும், நூற்கவும், அதை நெசவாளரிடம் கொடுத்து நெசவு செய்து உடுத்தவும், அதன் மூலமாக அன்னியத் துணி ஆலைத் துணிகளை விலக்கவும், அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கவேண்டும். இங்ஙனம் அன்னியத் துணிகளை பஹிஷ்கரித்துக் கதர்த்தொழிலைக் கையாளும்படி செய்வதால், அவர்களுடைய பணம் மிச்சப்படுவதோடு, சிரேஷ்டமான சமூக ஊழியம் செய்யவும் நமக்குச் சந்தர்ப்ப மேற்படுகிறது. கிராமத்தாருக்கும் நமக்கும் நெருங்கிய சம்பந்தமும், அதன் மூலமாக உண்டாகின்றது. உண்மையான ராஜீய ஞானத்தை அவர்களுக்குப் போதிக்கவும், சுய நம்பிக்கையுடன் வாழும்படி கற்பிக்கவும், அது நமக்கு இடந்தருகின்றது. * * *



இலங்காஷயர் வியாபாரம் துன்மார்க்கமான வியாபாரம்; ஏனெனில், லட்சக்கணக்கான இந்தியக் குடிமக்களை அது நாசம் செய்து விட்டது; இன்னும் நாசம் செய்து வருகிறது. ஒரு துன்மார்க்கமான காரியம் மற்றொன்றையும் செய்யத் தூண்டும். ஆகையால் பிரிட்டிஷாரின் பல துன்மார்க்கமான காரியங்களுக்கு மூலகாரணமான லங்காஷயர் வியாபார ஆசையை ஒழித்து விட்டால், இந்தியாவுக்கு நன்மை யாவதோடு, கிரேட் பிரிட்டனுக்கும் நல்லதாகும்; கிரேட் பிரிட்டன் உலகத்தில் சிறந்து விளங்குவதால், பொதுவாக மனித வர்க்கத்துக்கே அது நன்மையாக முடியும். * *

தேசத்தாரின் தேவைகளை ஸன்மார்க்கத்தில் பூர்த்தி செய்தாலன்றி, தேசத்தின் க்ஷேமத்தைக் கருதியதாகாது. குடிப்பழக்கம் உள்ளவர்களுக்குச் சாராயம் முதலிய மயக்க வஸ்துக்களை ஒரு தேசத்தார் கொடுத்துதவுவது தவறாகும், துன்மார்க்கமு மாகும். மயக்க வஸ்துக்களைப் பற்றி எது உண்மையோ, அது தான்யங்கள் துணிமணிகளைப் பற்றியும் உண்மைதான். ஏனெனில், தான்ய உற்பத்தியையும் துணி உற்பத்தியையும் அது நாசமாக்கி, அந்த வேலையில் ஈடுபட்டிருந்தவர்களைத் தரித்திரத்தில் ஆழ்த்தி விடுகின்றது. மயக்க வஸ்துக்கள் ஒருவனை எவ்வளவு தூரம் கெடுக்க முடியுமோ, அந்த அளவுக்குத் தரித்திரமும் சோம்பேறித் தனமும் கெடுத்து விடக்கூடும். ஒருவனுக்கு மனச்சோர்வு ஏற்பட்டாலென்ன, மயக்கம் உண்டானா லென்ன? இரண்டும் ஒன்று தான்; இரண்டும் ஆபத்துத்தான். மனச் சோர்வு அதிக ஆபத்தென்று கூட நான் சொல்வேன்; ஏனெனில், தரித்திரமும் சோம்பேறித்தனமும் பாவச் செயல்கள், அல்லது துன்மார்க்கமான காரியங்கள் என்பதை, இந்நாட்டார் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. * * *

ஆகையால் இந்தியாவின் இறக்குமதிகளை ஒரு ஹத்துக் குட்படுத்துவது எப்படி இந்தியரின் கடமையோ, அது போல், பிரிட்

டிஷார் தங்களுடைய ஏற்றுமதிகளை (இந்தியாவின் க்ஷேமத்தை யுத்தேசித்து) ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டியது கடமையாகும். * * *

கைநூல், கை நெசவு, கதர் மூலமாக அன்னியத் துணிகளைப் பஹிஷ்காரம் செய்வதால் சிறந்த இராஜீய அநுகூலம் உண்டாவதோடு, பரம ஏழைகள்கூடத் தங்களுடைய பராக்கிரமம் இப்படிப்பட்டதென்று உணர்ந்து, இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் சேர்ந்துழைக்கும்படி, அவர்களைத் தூண்டும் என்பது என்னுடைய நம்பிக்கை. * * *

எல்லா பிரிட்டிஷ் சாமான்களும் நமக்குத் தீங்கிழைப்பனவல்ல. ஆங்கிலப் புத்தகங்களைப் படிப்பதனுல் நமக்கு நன்மையுண்டு. அவை போன்ற இன்னும் சில பண்டங்களும் இருக்கின்றன. துணி சம்பந்தப்பட்டவரையில், பிரிட்டிஷ் துணி மாத்திரம் நமக்குக் கெடுதல் என்பதல்ல; எல்லா அன்னிய தேசத் துணிகளும் கெடுதல்தான்; சுதேச ஆலைத்துணியும், கொஞ்சம் சுமாராகக் கெடுதல்தான். கைநூல் கைத்தறி மூலமாக அன்னியத் துணியை பஹிஷ்காரம் செய்வதைப்போல், வேறு உபாயங்களை அனுஷ்டிப்பதால் பிடிட்டிஷ் துணி பஹிஷ்காரம் பயன்படாது. எல்லா அன்னியத் துணிகளையும் பஹிஷ்கரித்தாக வேண்டும். ஏதோ ஒரு தண்டனை விதிப்பதற்காக நாம் பஹிஷ்கரிக்க வில்லை. நாம் உயிர் வாழ்வதற்காகவே, அங்ஙனம் செய்து தீர வேண்டியிருக்கிறது. * * *

இராட்டினத்தைப்பற்றி என் இவ்வளவு தூரம் பேசினேனென்ருல், வேறு திறமையான செய்தி யெதுவும் தேசத்தாருக்கு நான் சொல்லக்கூடிய ஸ்திதியில் இல்லை. கிரமமான, அமைதியான வழிகளில் ஸ்வராஜ்ய மடைவதற்கு, இதுபோல வேறு பலன் தரத்தக்க மார்க்கம் எனக்குத் தெரியாது. * * *

2. ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை:—ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை இராட்டினத்திற்கு அடுத்தபடியாகத்தான் முக்கியமானது என்று கருத வேண்டாம். உயிர் வாழ்வதற்கு மூச்சு எவ்வளவு முக்கியமோ, அதுபோல் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையும் ஜீவாதாரமாகும். ஸ்வராஜ்ய மடைவதற்கு ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை இன்றியமையாத தென்பதை அனேகமாக எல்லோரும் ஒப்புக்கொள்வதால், அதிகமாக அதைப்பற்றி நான் பேச வேண்டுவதில்லை. * * *

திருடர்கள் அல்லது கொள்ளைக்காரர்களின் கையிலிருந்து கவர்ன்மெண்டார் ஜனங்களைக்காப்பாற்ற முடியும்; ஆனல் ஒரு



சமூகத்தார் இன்னொரு சமூகத்தாரை பஹிஷ்கரிப்பதென்று ஏற்பட்டால், ஸ்வராஜ்ய கவர்ன்மெண்டா யிருந்தால்கூட, அவர்கள் பந்தோபஸ்தளிப்பது அசாத்தியமான காரியம். * * *

ஆனல் எந்த அரசாட்சியும், அது ஸ்வராஜ்ய ஆட்சியாயிருந்தாலுமே, யுத்த காலத்துக்கவசியமான ஏற்பாடுகளுடன் பிரதி தினமும் இருந்துகொண் டிருக்க முடியாது. ஸ்வராஜ்ய ஆட்சியென்ருல், ஹிந்துக்களும் முஸல்மான்களும் மற்றவர்களும் மனப்பூர்வமாக ஒன்றுபட்டு வாழ்வதையே, தன் அஸ்திவாரமாகக் கொண்டிருக்கும்; எனவே இந்துக்களும் முஸல்மான்களும் ஸ்வராஜ்யமடைய விரும்பினல், தங்கள் வேற்றுமைகளைத் தாங்களே சமரஸமாகத் தீர்த்துக் கொள்ள வேண்டும். * * *

3. தீண்டாமை —ஸ்வராஜ்யத்துக்கு மற்ெறொரு தடையாகும். தீண்டாமையை யொழித்தலும், இந்து முஸ்லீம் ஒற்றுமையைப் போலவே, ஸ்வராஜ்யத்துக்கு முக்கியமான சாதனம். இது, இந்துக்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினை. ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் உரிமைகளை அன்னுருக்குத் திருப்பிக் கொடுக்கும்வரையில், ஸ்வராஜ்யம் கேட்க வாயில்லை; ஸ்வராஜ்யம் கிடைத்தாலும், அநுபவிக்க யோக்கியதை யில்லை. ஒடுக்கப்பட்டவர்கள் இதே நிலைமையில் இருக்கிற வரையில், இந்துக்களும் ஒடுங்கிக் கிடக்க வேண்டியதுதான். இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயர்கள் நம்மை நடத்துவதுபோல்தான், ஆரியர், பழைய காலத்தில் இந்தியா மேல் படையெடுத்து வந்தபோது, இந்து ஸ்தானத்தின் பூர்விகக் குடிகளை நடத்தினர்களென்று, சரித்திர ஆசிரியர்கள் சொல்லுகிருர்கள். அது வாஸ்தவமானல், தீண்டாதவர்களென்போரை நாம் சிருஷ்டித்ததற்கு, நமது தற்கால அடிமைத்தனம், ஒரு நியாயமான தண்டனை யென்றே சொல்ல வேண்டும். இந்த அபக்யாதியை எவ்வளவு சீக்கிரத்தில் நாம் நீக்கிக் கொள்ளுகிருேமோ, அந்த அளவுக்கு நமக்கு நன்மை யுண்டு. ஆனல், தீண்டாமை தெய்வத்தின் நியமம் என்று, நமக்குக் குருக்களாகும் வைதிகர்கள் சொல்லுகிருர்கள். எனக்கும் இந்து மதத்தைப்பற்றிக் கொஞ்சம் தெரியும். வைதிகர்கள் சொல்வது பிசகு. மனிதவர்க்கத்தில் ஒரு பகுதியினரைத் தீண்டாதவர்களாக ஒதுக்கித் தள்ளிவைக்கக் கடவுள் ஆக்ஞாபித்ததாகச் சொல்வது, தெய்வ நிந்தனையாகும். * * *

சுத்தி செய்து கொள்ள வேண்டியவர்கள், உயர்ந்த ஜாதியார் என்று சொல்லிக் கொள்வோர் தான், தீண்டாதவர்களல்ல. தீண்டாதவர்களுக் கென்று தனியாக எவ்விதமான கெட்ட வழக்கமும் இல்லை; அழுக்கு, அசுத்தம் முதலியவை, அவர்களிடத்தில் மாத்

திரமே காண்கிறோ மென்ப தில்லை. நமது குற்றங்களை நாம் கவனியாம லிருக்கும்படி செய்வது, நாம் மேல் சாதியார் என்னும் இறுமாப்புத்தான். நம்மாலேயே ஒடுக்கப்பட்டு இன்னும் விடுதலை யடையாம லிருக்கிறவர்கள் செய்யக்கூடிய அற்பப் பிழைகள், நம் கண்ணுக்குப் படுவதற்கும், நமது இறுமாப்புத்தான் காரணம். ஒவ்வொரு தேசத்தாரும் சோதிக்கப் படுவதுபோல், மதங்களுக்கும் இது சோதனைக் காலமென்று எண்ணவேண்டும். தெய்வம், ஒரு ஜாதியார் அல்லது வகுப்பாரைத் தான் கடாக்ஷிக்கும் என்பதில்லை. பிரம்மஞானம் எவருக்கும் ஏகபோகமான பொக்கிஷமல்ல. தெய்வத்தை நாடி நிற்பவர் யாரா யிருந்தாலும், தெய்வம் அருள்சுரக்கக் காத்துக் கொண்டிருக்கிறது. அநியாயம், அஸத்தியம், இம்ஸை ஆகியவற்றில் நம்பிக்கை கொண்ட ஜாதியும், மதமும், உலகத்தில் அழிந்துபோவது நிச்சயம். தெய்வம் ஜோதி மயமாக விளங்குவது ; கிருபாநிதி ; சத்தியமே உருவெடுத்தது. அஞ்ஞானமும், பகைமையும், அஸத்தியமும் அதன் முன் நில்லா. சிருஷ்டி யெல்லாம் கடவுளுக்கு ஒரு துரும்பே. அவர் முன்பாக நாம் எம்மாத்திரம்? அவருடைய சிருஷ்டியில் அற்பப் பிராணியா யிருந்தாலும், அதற்குரிய அந்தஸ்தைக் கொடுத்தாக வேண்டும். கந்தை யுடுத்திச் சென்ற குசேலரைத்தான், ஸ்ரீ கிருஷ்ணன் விசேஷமாக கௌரவித்தார். அன்பு தான் எந்த மதத்துக்கும் ஆணி வேர். * * *

4. சுயராஜ்ய ஏற்பாடு:—சுயராஜ்யம் என்றால் என்ன வென்பதை ஜனங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது தான் ; அதாவது, இந்தியாவிலுள்ள ஸகல ஜனங்களும் விரும்புவதும், எல்லோரும் சேர்ந்து மன்றாடிப் பெற வேண்டியதுமான சுயராஜ்யம் என்பது என்னவென்று, ஜனங்கள் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். *

நான் சொல்லும் சில யோசனைகளாவன :—

1. வோட்டுக் கொடுக்கும் சுதந்தரம் ஒருவருடைய சொத்தையாவது பதவியையாவது உத்தேசித்துக் கொடுபடக் கூடாது. தேசத்துக்காக உழைத்துச் செய்யும் வேலையைப் பொறுத்து, அது கொடுபடவேண்டும். காங்கிரஸில் வோட்டுச் சுதந்தரம் பெற, தேச உழைப்பே காரணமாக இருக்க வேண்டு மென்று யோசனை சொல்லப்பட்டிருப்பதை, உதாரணமாகக் கவனிக்க வேண்டும். கல்வியையும் சொத்தையும் உத்தேசித்து வோட்டுச் சுதந்தரம் கொடுப்பது, வீண் என்று ஏற்பட்டுவிட்டது. இராஜாங்கத்தின் க்ஷேமத்திலும் அதனுடைய அரசியலிலும் சம்பந்தப்பட இஷ்டப்



படுகிறவர்கள் தேகத்தை உழைத்து வேலை செய்ய, ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்கும்.

2. இராணுவச் செலவு நம்மைப் பாழாக்குவதால், சாதாரண காலங்களில் உயிரையும் உடைமையையும் பாதுகாப்பதற்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவுக்கு அதைக் குறைத்துவிட வேண்டும்.

3 நீதி பரிபாலனச் செலவைக் குறைக்கவேண்டும். அதன் பொருட்டு, முடிவான தீர்ப்புச் செய்யக்கூடிய நீதி சபை, டில்லியிலிருக்க வேண்டுமே யல்லாமல், லண்டனில் இருக்கக் கூடாது. சொத்து சம்பந்தமாக வழக்கிடும் வாதி பிரதிவாதிகள், மத்தியஸ்தத்துக்குக் கட்டுப்படும்படி பெரும்பான்மையான வழக்குக்களில் கட்டாயப் படுத்தப்பட வேண்டும் ; மத்தியஸ்தப் பஞ்சாயத்தார்கள், கைக்கூலி வாங்கிக் கொண்டதாகவாவது, அல்லது சட்டத்தை துஷ்பிரயோகம் செய்ததாகவாவது இருந்தாலொழிய, அவர்களுடைய தீர்ப்பே முடிவான தீர்ப்பாக வேண்டும். அஸல் கோர்ட்டுக்கும், முடிவான அப்பீல் கோர்ட்டுக்கு மிடையி லுள்ள நடுத்தரக் கோர்ட்டுகள், எடுபட்டு விட வேண்டும். முன் செய்த தீர்ப்புக்களையே பிரமாணமாகக் கொள்வதை ஒழித்துவிட வேண்டும். இங்கிலாந்தில் அனுஷ்டானத்தி லுள்ள நடவடிக்கை முறையை நாம் அடிமைகள் போல் பின்பற்றி வந்திருக்கிறோம்; அந்த முறை, அனுவசியமான சுழற்சிகளை உடையது. வியவகாரிகள் தங்களுடைய கட்சியைத் தாங்களே எடுத்து வாதிப்பது சாத்தியப்படும்படி, நடவடிக்கை முறையைச் சுலபமாகச் செய்ய வேண்டுமென்பது, குடியேற்ற நாடுகளின் போக்கா யிருக்கிறது.

4. புத்தியை மயக்கத்தக்க சாராயங்கள், (கஞ்சா அபின் முதலிய) லாகிரி வஸ்துக்களி லிருந்து இராஜாங்கத்துக்குக் கிடைக்கும் வருமானத்தை ஒழித்து விடவேண்டும்.

5. தேசத்தின் நிலைமைக்குத் தகுந்த சம்பளங்களே இராணுவ உத்தியோகஸ்தர்களுக்கும், மற்ற நிர்வாக உத்தியோகஸ்தர்களுக்கும், கொடுபடும்படி, சம்பளங்களைக் குறைத்து விடவேண்டும்.

6. பாஷை வாரியாக மாகாணங்களைப் பிரித்து, அதனதன் உள் நிர்வாகத்தை நடத்தவும், அதனதனை அபிவிருத்தி செய்யவும், அததற்கு முழுச் சுவாதீனம் இருக்கும்படி செய்ய வேண்டும்.

7. இந்தியரல்லாத அன்னியர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தனியுரிமைகளை யெல்லாம் பரிசோதனை செய்ய, ஒரு கமி

ஷனை நியமிக்க வேண்டும்; அந்தக் கமிஷன் செய்யக்கூடிய சிபார்சுகளுக் குட்பட்டு, யார் யார் என்ன என்ன பாத்தியங்களைக் கிரமமாகப் பெற்றிருக்கிறார்களோ, அவர்கள் அப்பாத்தியங்களை அனுபவிப்பதை ஆதரிக்க வேண்டும்.

8. மத்திய கவர்ன்மெண்டிடமிருந்து என்ன உபத்திரவமும் ஏற்படாமல், இந்திய மன்னர்கள் தங்கள் தங்களுடைய பதவிகளை வகித்திருக்கலாம் என்று உறுதி கூற வேண்டும்; ஆனால், பினல் கோடில் சொல்லப்பட்டுள்ள குற்றங்களைச் செய்யாதவர்கள், சுய ராஜ்ய இந்தியாவில், சுதேச மன்னர்களின் சம்ஸ்தானங்களி லிருந்து வந்து அடைக்கலம் புகுந்தால், அப்படி அடைக்கலம் பெற, அவர்கள் பாத்திய முடையவர்களாக இருக்க வேண்டும்.

9. துரைத்தனத்தார் யதேச்சாதிகாரஞ் செலுத்துவதற்கு ஆதாரமாக விருக்கிற சட்டங்கள் எல்லாம் ரத்துச் செய்யப்பட வேண்டும்.

10. எல்லா உத்தியோகங்களிலும், உயர்ந்த உத்தியோகத்தை வகிக்க யோக்கியதையுடைய எல்லோருக்கும், அது கிடைக்கும் படி இருக்கவேண்டும். நிர்வாக உத்தியோகங்களின் பொருட்டும், இராணுவ உத்தியோகங்களின் பொருட்டும் நடத்தப்படும் பரீட் சைகள், இந்தியாவில் நடைபெற வேண்டும்.

11. அந்தந்த மதத்தினர்கள், மற்ற மதத்தினர்களைச் சகித்துக் கொள்வதற்குட்பட்டு, தத்தம் மதத்தை அனுசரித்து நடக்க உரி மையுள்ளவர்கள் என்று, ஒப்புக் கொள்ளப்பட வேண்டும்.

12. மாகாண கவர்ன்மெண்டுகள், மாகாண சட்ட சபைகள், கச்சேரிகள், ஆதியவைகள், குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள், அந் தந்த மாகாணத்தின் பாஷையையே உபயோகப் படுத்த வேண்டும். முடிவான அப்பீல் கோர்ட்டாகிய ப்ரிவி கவுன்சிலின் பாஷை, இந்துஸ்தானியாகச் செய்யப்பட வேண்டும். இந்துஸ்தானியை, தேவநாகரி எழுத்திலாவது, உருது எழுத்திலாவது, எழுதவேண் டும். மத்ய கவர்ன்மெண்டு, மத்திய சட்ட சபை, ஆகிய இரண் டின் பாஷையும், இந்துஸ்தானியாக இருக்க வேண்டும். அன்னிய தேசங்களுடன் பேச்சுவார்த்தை நடத்துவதை மட்டில் ஆங்கிலத் தில் செய்ய வேண்டும்.

கௌரவமும் முழு சமத்வமும் பொருந்திய நிபந்தனைகளின் மேல் பிரிட்டிஷாருக்கும் நமக்கும் சம்பந்தமிருந்து கொண்டிருக்கு



மென்று வைத்துக்கொண்டு மேற்சொன்ன ஏற்பாட்டை நான் சொல்லி யிருக்கிறேன். * * *

என்னுடைய அபிப்பிராய மென்னவென்றால், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் என்ன சொல்லுகிறார்களோ அதே அவர்களு டைய உத்தேசமாக விருந்து, சரி சமத்துவ மடைய யோக்கியப் பொறுப்புடன் அவர்கள் நமக்கு உதவி செய்வார்களானால், பிரிட் டிஷ் சம்பந்தமிராமற் பிரிந்து விடுவதைக் காட்டிலும், அதுவே பெரிய வெற்றியாக விருக்கும். ஆகையால், பிரிட்டிஷ் ஏகாதி பத்தியத்துக்குட்பட்டு சுயராஜ்யமடையவே பிரயாசைப்பட, நான்



மஹாத்மா காந்தி.

விரும்புகிறேன். ஆனால் பிரிட்டிஷார் பிசகின்மேல் பிரிந்து விடுவதுதான் நல்லதென்று ஏற்பட்டுவிடின், பிரிந்துவிடத் தயங்க மாட்டேன். ஆகையால் பிரிட்டனிலிருந்து நாம் பிரிந்து விடு கிறதா, பிரியாம லிருக்கிறதா என்று நிர்ணயிக்கும் பொறுப்பை, பிரிட்டனுக்கு விட்டு விடுவேன். * * *

5. தேசியப் பாடசாலைகள்:—தேசியப் பாடசாலைகளை சம்ரட்சிப்பது அப்படிப்பட்ட வேலைகளில் ஒன்று. கதருக் கடுத்தபடியாக, தேசியப் பாடசாலைகளை நடத்துவதுதான் நல்ல பலன் கொடுத்திருக்கிறது என்பது, பொது ஜனங்களுக்குத் தெரியாமலிருக்கலாம். * * *

இந்த ஸ்தாபனங்கள் சரியான தேசிய ஸ்தாபனங்களாக இருக்க வேண்டுமானல், இந்து முஸ்லீம் ஒற்றுமையை வளர்க்க வேண்டும். தீண்டாமை என்பது ஹிந்து மதத்திற்கே அவமானத்தை உண்டு பண்ணுவது என்றும், மனுஷ்ய சுபாவத்துக்குத் தீங்கிழைப்பது என்றும், மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். நூல் நூற்பதிலும் நெசவு நெய்வதிலும் மாணவர்களுக்குப் பாண்டித்தியம் உண்டாகும்படி செய்ய வேண்டும். கைராட்டினமும் கதரும் வல்லமை உடையவை யென்ற நம்பிக்கை காங்கிரஸுக்கு இருந்தால், கைராட்டின சாஸ்திரத்தை தேசியப் பள்ளிக்கூடங்கள் கற்பிக்க வேண்டியதுதான். கதர் உற்பத்தி செய்வதும் அவைகளின் வேலையாக இருக்க வேண்டும். பையன்களுக்கும் பெண்களுக்கும் வேறு படிப்புவேலையே இருக்கக் கூடாதென்று நான் சொல்லவில்லை. ஆனல், மனோவிருத்தி கைப்பழக்கம் இருதய அபிவிருத்தி ஆகியவைகளைச் செய்விப்பது, சேர்ந்தாற் போற்செய்யப்பட வேண்டிய வேலைகள் என்பது எனது வாதம். ஒரு தேசியப் பள்ளிக்கூடத்தின் யோக்கியதையை மாணவர்களுடைய படிப்பைக் கொண்டு நிதானித்துவிடக் கூடாது. ஆனல், அவர்களுடைய தேசிய குணத்தைக்கொண்டும், பஞ்சு கொட்டுவதிலும் நூல் நூற்பதிலும் நெய்வதிலும் அவர்களுக்குள்ள சாமர்த்தியத்தைக் கொண்டுமே நிதானிக்க வேண்டும். எந்த தேசியப் பள்ளிக்கூடத்தையும் கலாசாலையையும் மூடிவிடக்கூடாது என்று நான் விரும்புகிறேனுயினும், ஹிந்துக்கள் அல்லாத பிள்ளைகளைச் சேர்த்துக் கொள்ளப் பிரியப்படாததும், தீண்டாதார்களை விலக்கி வைத்திருப்பதும், பஞ்சு கொட்டுவதும் நூல் நூற்பதும் அவசியம் கற்பிக்கப்பட வேண்டிய பாடங்களாகக் கொள்ளாததுமான எந்த தேசியப் பள்ளிக்கூடத்தையும் மூடிவிட, நான் தயங்கமாட்டேன். ஒரு பள்ளிக்கூடத்தின் வாயிலில் தொங்கும் பலகையில் "தேசிய" என்ற வார்த்தை எழுதப்பட்டிருப்பதைக் கொண்டும், அது கவர்ன்மெண்டால் ஏற்படுத்தப்பட்டுள்ள ஸர்வகலாசாலையுடன் சம்பந்த முடையதல்ல வென்பதைக் கொண்டும்,நாம்திருப்தியடையக்கூடிய காலம் போய்விட்டது. பல தேசியப் பள்ளிக்கூடங்களில் தேச பாஷையும் இந்துஸ்தானியும் அசட்டை செய்யப்படுகிறதை நான் சொல்லாமலிருக்க முடியவில்லை. தேசபாஷை அல்லது இந்துஸ்தானி மூலமாகக் கல்வி கற்பிக்க வேண்டிய முக்கியத்தைப் பல உபாத்தியாயர்கள் இன்னும் உணரவில்லை. * * *



6. லாகிரி வஸ்துக்கள்:— இந்த துன்மார்க்கத்தி லிருந்து கிடைக்கும் ஐவேஜியைக் கொண்டு நமது குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கப்படுவதற்கு நாம் சந்தோஷப்பட வேண்டியதில்லை. கல்விச் செலவுக்குப் பணம் கிடைக்காமற் போனுலும் போகட்டும், இந்த வரும்படியைச் சட்ட சபைப் பிரவேசக் கட்சியினர் ஒழித்து விடுவார்களாயின், அவர்கள் சட்ட சபைகளுக்குள் நுழைந்ததை நான் மன்னித்து விடுவேன். இந்த வரும்படி போய்விடின், கல்விச் செலவுக்குப் பணம் அகப்படாமல் போய்விடாது, அவ்வளவு தொகை ராணுவச் செலவில்குறைத்துவிட்டால் சரியாகப் போய்விடும்.*

7. வங்காள அடக்குமுறை:—1. அவர்கள் சொல்லும் நிலைமை தேசத்தில் ஏற்பட்டிருப்பதாக ருஜுவாக வில்லை.

2. அவர்கள் சொல்லுகிறதுபோல் நிலைமை ஏற்பட்டிருப்பதாக வைத்துக் கொண்டாலும், அவர்கள் கொடுக்கும் மருந்து வியாதியைக் காட்டிலும் கேடானதாக இருக்கிறது.

3. அந்த நிலைமையைச் சமாளிக்க சாதாரணச் சட்டத்திலேயே வேண்டிய ஏற்பாடுகள் இருக்கின்றன.

4. அசாதாரணமான அதிகாரங்கள் தேவையாக விருந்திருப்பின், கவர்ன்மெண்டார் சிருஷ்டித்த சட்ட சபைகளிடமிருந்தே அவைகளைப் பெற்றிருக்க வேண்டும்.

அடக்குமுறையானது நாள்பட்டு உடம்பில் ஊறிவிட்ட ஒரு வியாதியின் அடையாளமே என்று நான் நினைக்கின்றேன். ஐரோப்பியருடைய ஆதிக்கமும் ஆசியாக்காரரின் அடக்கமும் என்பது ஒரு பல்லவி. அதைச் சுருக்கமாக 'வெள்ளையர் கறுப்பர்' என்று சொல்லுவதுண்டு. வெள்ளைக்காரர்கள் கறுப்பு மனிதர்களை நுகத்தடியில் கட்டி அடிப்பதைத்தான், வெள்ளைக்காரர் சுமை தூக்குவதாக மாற்றிச் சொல்லுகிறார்கள். * * *

நாம் எல்லோரும் பரிபூரண சத்யாக்ரகிகளாக முயல்வோம். மிகத் தாழ்ந்தவர்களும் அடையக்கூடாத எந்த யோக்கியதையும் பரிபூரண சத்யாக்ரகிக்கு வேண்டியதில்லை. சத்யாக்ரகம் என்பது நம்முடைய ஆத்மாவின் குணமே. அது எல்லோரிடத்திலும் இருக்கிறது. சுராஜ்யம்போல் அதுவும் நம்முடைய பிறப்புரிமை. அதை நாம் தெரிந்து கொள்வோம்.

வந்தேமாதரம்.






ஒரு கருமயோகி எழுதியது

(626-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

## க. "தான்"—"நான்"

"'யான்', 'எனது', என்னும் செருக்கறுப்பான் வானோர்க்(கு) உயர்ந்த உலகம் புகும்"

என்பது, திருக்குறளிலே துறவைப்பற்றிக் கூறுவது. 'நான்' என்னும் அகங்காரத்தையும், 'எனது' என்னும் மமகாரத்தையும், இவ்விரண்டினாலும் விளையும் அகக் களிப்பையும் ஒழித்தவன், தேவருலகினும் மேலான பதவியை அடைவான்' என்பதே, இதற்கு வெளிப்படையான பொருளாகும். இப்பொருளை விட்டு, உரையாசிரியர் பரிமேலழகர், யான் என்பதற்கு, 'தான் அல்லாத உடம்பைத் தானென்றும்' எனப் பொருள்கூறி, செருக்கைக் களிப்பாக்கி, களிப்பை 'அறியாமை' யாக்கி, உரையெழுதியிருக்கிறார். 'யான்', 'எனது', என்னும் இயற்கை யுணர்ச்சியைத் திருவள்ளுவர் மறுக்கவு மில்லை, கண்டிக்கவு மில்லை; அதன் மிகையால் வரும் செருக்கையே கண்டித் திருக்கிறார். அப்படி அவர் கண்டிப்பதிலும் கூட, ஒரு விந்தையைக் காணலாம்: மனித ஜன்மத்தில்தானே 'யான்' என்னும் அகங்காரம் அடைபவன், தேவர்க்கும் உயர்ந்த பதவியைப் பெற எவ்வளவு விரும்ப மாட்டான்! அவனுடைய அந்தச் சுபாவத்தையே அவன் விடுதலைக்குத் துணையாக்கி, இதை விட்டனையாயின் இதனினும் மிகப்பெரிய தொன்றைப் பெறலாமென்று கூறியிருக்கிறார். 'இராமன் வேஷம் பூண்டு சீதையைக் கைப்பற்று' என்று இராவணனுக்கு யுக்தி கூறியபோது, 'அவ்வேடம் பூண்ட மாத்திரத்தில் பிறன் மனையை விரும்பும் வேட்கை ஒழிந்து போகிறதே!' என்று அவன் பதிற் சொன்னனாம். அது





போல, வானோர்க்கும் உயர்ந்த உலகைப் பெற்றுனுக்கு, 'யான்' 'எனது' என்னும் செருக்கற்றுப்போம் என்பது, நாயனர் கருத்துப்போலும். அஃது எங்ஙனமாயினும், பரிமேலழகர் வலிந்துகொண்ட பொருளை நாயனர் இக்குறளில் வைத்திலர் என்பதே என் துணிவு. இனிப் பரிமேலழகர் பொருளைச் சிறிது கவனிப்போம். யான், தான் என்பது உடம்பு அன்று, என்கிறார்; உடம்பு மாத்திரம் அன்று, என்று கூறவில்லை. இது, யுக்தி புத்தி அநுபவங்களுக்குப் பொருந்துமோ? தான் என்பது ஸ்தூல சரீர மட்டும்தான் என்று ஒருவேளை சாதிக்கலாகும், சாதிப்பாரும் நம்புவாரு முளர். தான் என்பதிலே ஸ்தூல சரீரத்துக்குப் பங்கே யில்லை; தான் என்னும் விருக்ஷத்திலே உடம்பு ஒரு கிளை, இலை, மலர், ஒன்றுமே யில்லை; உடம்பு வேறு அம்மரம் வேறு என்று கூறுதல், விபரீதமன்றோ? இவ்வாறு கூறுவோர்:

"உயிர் கொடுபோவான், உடல்கொடு போகான்
ஏதுக் கழுவீர் ஏழை மாந்தர்காள்?
உயிரினை இழந்தோ? உடலினை இழந்தோ?"

என்று செருக்கொடு வினவுவர்.

'உயிரொடு கூடிய உடலுக்கே அழுவோம்; அவன் உயிரைக் கொண்டுபோய் உடலையும் கெடுத்து விட்டான். உடலிலா உயிரைக் காண்டில மாயினும், உயிரிலா உடலினை வேண்டிலம்,' என்று விடை கூறுதல், பொருந்தாதோ? ஏதம் கொண்டு ஊதியத்தைப் போகவிடுதல் பேதைமை யாவதுபோல, ஐம்பொறி யறியக்கண்ட ஐம்பொறிநிலையாம் உடலை முழுதும் பொய்யெனப் போகவிட்டு, ஐம்பொறிகளில் எதுவும் நேரில் அறியாத வொன்றைமட்டும் மெய்யெனக் கொள்ளுதலும், பேதைமையாகாதோ? இச் சந்தர்ப்பத்திலே, உடலும் உயிரும், ஒரு மலரின் அழகும் மணமும் போலும் என்பது பொருந்தும். அழகுள்ள முருக்கம் பூவையும் மணமுள்ள மகிழம் பூவையும் அவ்வளவு விரும்பாமல், அழகும் மணமும் சேர்ந்துள்ள ரோஜாப்பூவை விரும்புவதே போலும், உயிரொடு கூடிய உடலை விரும்புவதும். எனவே, யாக்கை நிலையாமை மெய்யெனினும், (அதாவது, உயிரொடு கூடிய யாக்கையென்றுணர்க; யாக்கை மட்டும், நாமறிந்தவரை, அழிவற்றதேயாம்; ஏனெனின், உடலின் பகுதிகளாகும் பௌதிகப் பொருள்கள் உருமாறுவ தன்றி அழிவ தில்லை) யாக்

கையே பொய்யெனல் பொருந்தாது. இதனுல், 'தான்' 'யான்' என்பது உயிரொடு கூடிய உடலென்பது தெளிவாயிற்று. இம்மட்டுத் தானே, இன்னும் இவை இரண்டும் தவிர, வேறுண்டோ என்பதை இனிக் கவனிப்பாம்.

உயிரொடு கூடிய உடலிலே, அவ்விரண்டையு மன்றி, புத்தி அல்லது மனம் என்று கூறும் ஒன்றிருப்பதையும் நாம் அறிகிறோம். இதுவே அறிவின் மூல மென்பர். 'உயிரொடு கூடிய உடலின் குணமே யிது' என்பாரு முளர். ஆயினும், இக்குணம், உயிர் உடல் என்னும் இரண்டு மன்றி, மூன்றுவதாகும் வேறொன்றாதலின், 'தான்' என்னும் விருக்ஷத்தின் ஒரு பாகமாக, அதையும் கருதுதல் பொருந்தும். வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களில் கூறும் எழுவகைக் கோசங்களைப் பற்றி நான் கூற வில்லை. உன்னையும் என்னையும் போன்ற சாமானிய மனிதர் ஆலோசனையால் தெளிந்து நம்பக் கூடியதையே கூறுகிறேன். 'மனம் அல்லது புத்தி என்னும் கருவியைக் கொண்டு அறிதல் என்னும் காரியத்தைச் செய்வது ஆத்துமா என்னும் கர்த்தா; அந்தக் கர்த்தா, இவை யாவற்றுக்கு மேலானது; இவை யாவும் நிலைமாறி யழிந்த பின்னரும், ஒரே நிலையாய் மாருது நிற்பது,' என்று கூறுவர். இங்ஙனம் கூறுவோர், உயிர்களையே, ஓரறிவுயிர், ஈரறிவுயிர், என அறுவகைப் படுத்தி, அவற்றுள் மேலானவற்றுக்கே ஆத்துமாவுண்டு, பிறவற்றுக் கில்லை என்பர். இவ்விதச் சூக்ஷுமப் பிரிவினைகளும் விவாதங்களும் சாமானியருக்குச் சுலப மல்ல. ஆயினும், 'தான்' என்பது, உயிரோடு சேர்ந்த உடலும், அச்சேர்க்கையில் காணப்படும் புத்தி—மனமும், அதற்கு மேலான எளிதில் அறியப்படாத ஆத்மா என்னும் ஒன்றும், இவையாவும் கூடிய சமஷ்டியைக் குறிக்கும் என்கலாம்.

இவ்வாறு குறிக்கப்படும் சமஷ்டியில், கருமேந்திரியங்களுக்குப் புலப்படும் பாகத்தை 'உடல் அல்லது ஸ்தூல சரீரம்' என்றும், அப்படிப் புலப்படாத பாகத்தை 'உயிர் அல்லது ஆத்துமா' என்றும், இவ்விரண்டும் சேர்ந்துள்ள நிலையைத் தான் என்றும் வைத்துக்கொள்வோம். ஒரு கணமேனும் ஒரே நிலையி லில்லாமல், தான், எல்லாவிதத்திலும் மாறிக் கொண்டே யிருப்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம்; சாஸ்திர ஆராய்ச்சியும் அப்படியே எண்பிக்கின்றது. ஆயினும், தான் தானுக (அதாவது, உயிர்-உடலாக) இருக்கு மட்டும், இம்மாறுதல்களின் மத்தியிலே ஓர்



ஒற்றுமையையும் காட்டுகிறது. உதாரணமாக, ஐந்தாம் வயதில் இருந்தபடி நான் ஐம்பதாம் வயதில் இருக்க வில்லையாயினும், ஐந்தாம் வயதில் இருந்த தான்தான் இப்பொழுது 50-வது வயதிலுமுள்ளது, வேறொன்றில்லை என்று, நிச்சயமாய் நம்புகிறேன். அந் நிலைக்கும், இந் நிலைக்கும், இறந்த பின்னிலைக்கு முள்ள வேற்றுமையை எண்ணியே, உடலைப் பொய்யென்றும் அழிவதென்றும் கூறுகின்றனர். இவ் வண்ணமே உயிர் அல்லது ஆத்துமாவும் மாறத்தான் செய்கின்றதாயினும், அது புலப்படாததால், அதை மட்டும் மெய் அல்லது நிலைத்தது என்கின்றனர். உடலை வஸ்து என்றும், மற்றதைச் சக்தி என்றும் பேசுவோமாயின், வஸ்துவும் சக்தியும் ஒரு சமஷ்டியாகத் தான் எனத் தோன்றிய காலந் தொட்டு, மரணம் என்ற மாறுதலுக்குப்பின் மறையும் வரை, சருவதா மாறிக்கொண்டேயிருக்கின்றன. கணந்தோறும் நிகழும் மாறுபாடுகளுக்கும் மரணமாறுபாட்டுக்கு முள்ள வேற்றுமை யாதெனின், அம்மாறு பாடுகளினூடே, தான் என்னும் தோற்றம் நிற்கின்றது; மரண மாறுபாட்டிலோ, அத் தோற்றமும் மாறி, மறைந்து விடுகின்றது. ஆயின், எக்காலத்தும், வஸ்துவிலோ சக்தியிலோ ஓர் அணுவேனும் அற்பமேனும் மாறுவதன்றி அழிவதில்லை என்பது மட்டும் திண்ணம். தான் அழியும் மரணத்தின் பின், உடல் அணுக்கள் யாவும் அழிவின்றி மாறிப் பிரிந்து பௌதிக உலகத்திலே கலந்து விடுவது போல, உயிரும், அதாவது ஆத்ம சக்தியும், அவ்வாறே பிரிந்து இயற்கையிற் காணும் சக்திப் பிழம்பில் கலந்து விடுகிறதென்று கூறுவதே, விஞ்ஞான ரீதிக்கும் புத்திக்கும் யூகத்துக்கும் பொருந்தும். வஸ்துவின் குணமே சக்தி என்பார் இதனை ஆக்ஷேபியார்; வஸ்து வேறு சக்திவேறு என்பார் மட்டும் ஆக்ஷேபிக்கக்கூடும். 'வஸ்து, சக்திகள் இருப்பதையும், அவற்றின் சில மாறுபாடுகளையு மன்றி, அவற்றின் ஆதி அந்தங்களைப்பற்றி நாம் ஒன்றும் அறியோம்; அவை நம் புத்திக்கு எட்டுவனவு மல்ல என்பதை, மறந்து விடக்கூடாது. 'தெரியும்' என்பார்க்கும் 'தெரியாது' என்பார்க்கும், மூடர்களுக்கும் ப்ரும்ம ஞானிகளுக்கும், இந்த விஷயத்தில், இரண்டொரு படிகள் தாம் வித்தியாசம்; அதிக மில்லை. இது நிற்க.

ஆதி அந்தம் நம்மால் அறிய முடியாததும்; உடலும் உயிரும் கூடியதும்; எப்பொழுதும் மாறிக் கொண்டிருப்பதும்; அங்ஙன மாறுவதில், பிறவித் தோற்றமுதற்

கொண்டு மரண மறைவுவரை நிகழும் வேற்றுமைகளி னிடையில், ஓர் ஒற்றுமையோடு காணுவதுமான சேர்க்கையை, தான் என்று சுட்டினேம். இவ்வண்ணம் பல கோடி சேர்க்கைத் தான்கள் பிரபஞ்சத்திலே தோன்றி மறைகின்றன. இவற்றில் ஓர் இரண்டேனும் முழுதும் ஒத்திருப்பது மில்லை, முற்றிலும் ஐக்கியமாவது மில்லை. இது பிர்த்தியக்ஷம். இவ்வாறு பல தான்களுக்குள் உள்ள பேதங்களே, ஒவ்வொரு தனித் தானுக்குமுள்ள சுயாபிமானத்தின் அடிப்படை; அகங்கார மமகாரங்களின் ஆணிவேர் இதுவே. ஒவ்வொரு தானுக்கும், தன்னதான தனிச் சேர்க்கையில் பற்றும், பிரியமும், அது வாழ்ந்தேற வேண்டு மென்ற வேட்கையும், இயற்கைக் குணமா யிருக்கின்றன. இதன் மூல காரணத்தை ஊன்றி ஆலோசித்தால், ஒவ்வொரு தானும் இயற்கைக் குணமாகச் சுகத்தை விரும்புவதும், அச்சுகத்தை அநுபவிப்பதற்குத் தன் சேர்க்கையே கருவியா யிருப்பதுமே என்பது, துலங்கும். இன்பத்தை இவ்வாறு நுகருவது, உடல் மட்டு மன்று, உயிர் மட்டு மன்று, சேர்க்கை முழுதுமே. (துன்பமின்மையும் ஓர் இன்ப மெனக் கொள்க), இயற்கையிலும் செயற்கையறிவு பயிற்சிகளாலும், ஒவ்வொரு தானும், விருப்பு வெறுப்புக்களை, வேண்டுதல் வேண்டாமைகளை, உள்ளதா யிருக்கின்றது. இந்த ராகத் துவேஷங்களுமே, உடலணுக்களையும் ஜீவசக்தியையும் போல, சருவதா மாறிக்கொண்டே இருக்கின்றன; கணத்துக்குக் கணம் மாறிக்கொண்டே இருக்கின்றன. உலகத்திலே யுள்ள வஸ்துத் தொகுதியும் சக்திப் பிழம்பும், கணந்தோறும் உட்பிரிவுகளில் மாறினும், மொத்தம் எப்பொழுதும் ஒரே நிலையா யிருக்கின்றன; கூடுவதுமில்லை குறைவதுமில்லை என்பதே சாஸ்திர சித்தாந்தம். அவ்வாறே, 'உலகத்திலே இந்தவஸ்து - சக்திகள் விளைக்கக் கூடிய இன்பத்தின் தொகுதியும், மொத்தத்தில் ஒரே எல்லையது, கூடவும் குறையவும் ஒண்ணுது,' என்று கொள்வதே பொருந்தும். இவ்வுண்மையை மறவாது மனத்தில் இருத்திக்கொண்டால், இன்ப மொத்தத்தில் தத்தமக்கு எவ்வளவு அதிகம் அடையக்கூடுமோ அவ்வளவையும் அடையுமாறு, ஒவ்வொரு தானும் முயலுவதையே, நாம் சுயாபிமான மென்கிறோம் என்பது விளங்கும்.

(தொடரும்)





# ஸம்ஸ்கிருத சுவடிகள்

ஸ்ரீ. R. அனந்தகிருஷ்ண சாஸ்திரி, சாந்தி நிகேதனம்

## பீடிகை



நான் முதலில் இரண்டு வருஷகாலமாக மதராஸ் கெவர்மெண்டு ஓரியண்டல் லைப்ரரியில் டாக்டர் ஆபர்ட்டு என்கிற ஜர்மன் வித்துவானிடத்தில் பழைய சுவடிகளை ஆராய்ச்சி செய்யும் வழியைக் கற்றுக்கொண்டு, பிறகு பன்னிரண்டு வருஷங்கள் அடையாறு புஸ்தகசாலைக்காக அநேக கிராமங்களில் சுற்றித்திரிந்து சுமார் பதினயிரம் ஏட்டுச் சுவடிகள் சேகரித்தேன். பிறகு மைசூர் புத்தகசாலைக்காக மகா-ா-ா-ஸ்ரீ அ. மகாதேவசாஸ்திரி யவர்களின் கீழ்ப் பத்து வருஷங்கள் வரை உத்திர தேசத்தில், ஹிமாலயா முதலான இடங்களில் ஸஞ்சாரஞ் செய்து, சுமார் பதினயிரம் கிரந்தங்கள் சேகரித்தேன். பிறகு பரோடா புஸ்தகசாலைக்காக எட்டு வருஷங்களாய் இரவு பகல் ஓரிடத்தில் தாமஸியாமல், காந்தாரம் முதல் ஆஸாம் முடிவு வரை கீழ்மேலும், கைலாசம் முதல் இலங்கை வரை தென் வடக்கிலும், அநேக தடவை ஒவ்வொரு முக்கிய கிராமங்களிலும் யாத்திரை செய்து; பதிமூவாயிரத்துக்கு மேல் பழைய கிரந்தங்கள் சம்பாதித்தேன். இப்பொழுது ஒரு வருஷகாலமாகத் தர்மமாகச் சம்பளமில்லாமல், சாந்தி நிகேதனம் என்கிற விசுவபாரதி கலாசாலை லைப்ரரியை உண்டாக்கிக் கொண்டு வருகிறேன். இவ்விதமாகச் சுமார் 35-வருஷங்கள் வரை இடைவிடாமல், நம் பரதகண்டம் பூராவும் அடிக்கடி சுற்றி நம் கிரந்தங்களைப் பற்றி அறிந்த விஷயத்தை ஆரிய மதாபிமானிகளுக்கு, இந்தப்

பத்திரிகை மூலமாகப் பத்திராசிரியரின் கோரிக்கைப்படி, தெரியப் படுத்துகிறேன்.

நம் பரத கண்டத்தில் எந்தக் காலத்தில் முதல் முதல் எழுத்துக்கள் வழங்கலாயின வென்று நிச்சயமாக, சரித்திரமூலமாக, ஒருவராலும் சொல்ல முடியாது. வியாகரண சாஸ்திர ருஷியான பாணிநியின் சூத்திரங்களை நன்றாக ஆராய்ந்து பார்த்தால், அ முதல் ஹ வரையிலுள்ள எழுத்துக்கள் உச்சாரணத்தில் இருந்தனவே தவிர, அவைகளுக்கு எழுத்துவடிவு இருந்ததா வென்று படித்தவர்கள் உறுதியாகச் சொல்லுகிற தில்லை. அசோக அரசன் கிறிஸ்து பிறக்குமுன், மூன்றாவது நூற்றாண்டில் எழுதிய சிலா சாஸனங்கள் மூலமாக, அக்காலத்தில் எழுத்து வடிவு இருந்ததாகத் தெரிய வருகிறது. அந்தச் சாஸனங்களில் இரண்டுவிதமாக எழுத்துக்கள் காணப்படுகின்றன. ஒன்று, இடது பக்கத்திலிருந்து வலது பக்கம், மற்றொன்று வலது பக்கத்திலிருந்து இடது பக்கம். இப்பொழுதும், இவ்வுலகத்தில் இந்த இரண்டுவிதமும் வியாபகமாக விருக்கின்றது. சீனதேசத்திலும், ஜப்பானிலும், வலது பக்கம் மேலிருந்து கீழ்வரை, வடிவு இல்லாமல், கோடுகள் மூலமாக, சுமார் இரண்டாயிர வருஷகாலமாக நம்முடைய கிரந்தங்களும் எழுதப்பட்டு வந்திருக்கின்றன. அசோகன் காலத்திற்குமுன் எழுத்தின் வடிவுகள் நம் பரத கண்டத்தில் இருந்ததா இல்லையா வென்று தீர்மானமாகச் சரித்திரக்காரர்களால் சொல்ல முடியாது. கிரீக் தேசத்திலிருந்து வந்த மகாஸ்தநிஸ் என்ற சரித்திரக்காரன், அசோகனுடைய தாதாவாக விருந்த சந்திரகுப்தனுடைய ராஜசபையில் வெகு வருஷங்கள் இருந்து, பிறகு தன் தேசத்திற்குப் போய், நம் தேச சரித்திரம் எழுதுங்கால், சந்திரகுப்தனுடைய கோர்ட்டில் வழக்குத் தீர்த்து நியாயம் செய்வது வாக்கினால் நடந்ததாகச் சொல்லி யிருக்கிறான். ஆதிமுதல், நம்முடைய வேதங்களை, குருவானவர் சீடர்களுக்கு எழுதிக்கொடுக்காமல், உபதேசித்து வந்தபடியினால், நம் வேதங்களுக்கு "சுருதி" யென்று பெயர் வந்தது. இப்பொழுது எழுத்து அச்சு முதலான சகல சௌகரியங்களும் வந்த காலத்திலும் கூட, வேதங்கள் உபதேச மூலமாக மனத்தில் உருவேற்றி வரப்படுகின்றன. வேதங்களை அடுத்து வந்த சிரௌதம் முதலிய சூத்திரங்களும், சுருக்கமாக வந்த காநஸமும், மனத்தில் உருவேற்றவே தவிர வேறில்லை. அதற்குப் பிறகு வந்த



புராணங்களும் இதிகாசங்களும், எழுத்து வந்ததின்மேல் ஏற்பட்டனவென்று சொல்ல வேண்டியதா யிருக்கின்றது. சில புராணங்களிலும் இதிகாசங்களிலும் சில கதைகள் சுருக்கமாக விருந்து, பிறகு விஸ்தரிக்கப் பட்டன. இதற்குப் பின்வந்த சாஸ்திரங்களும், காவியம் வியாக்கியானம் முதலியவைகளும், எழுத்து வந்தபின் ஏற்பட்டனவே தவிர அதற்குமுன் இல்லை. எழுத்தும் அச்சும் வராத காலமா யிருந்தால், இப்பொழுது நாம் தினந்தோறும் புதிது புதிதாக வெளிவருகிற புஸ்தகங்களை எதிர்பார்க்க முடியுமா?

அசோக அரசன் காலம் முதல் கிறிஸ்து பிறந்து பத்தாவது நூற்றாண்டு வரை ஆரியர்கள் எவ்விதமாக நம்முடைய சரித்திரங்களைக் கொண்டுவந்தார்க ளென்று தெளிவாகச் சொல்லமுடியாது. அந்தக் காலங்களில் எழுதிய சுவடிகள் தேதியுடன் அகப்படுகிற தில்லை. ஆண்டு சகாப்தங்கள் எவ்விதமாக வழங்கின வென்றும் காணப்படுகிற தில்லை. கிழக்கு துருக்கிஸ்தானத்தில் சில வருஷங்களுக்கு முன் சில வைத்திய கிரந்தங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகளை யந்திர மூலமாகப் படம் பிடித்துப் பார்த்ததில் அவற்றின் தேதி காணப்படாததினால், நிச்சயமாகக் காலத்தைக் குறிக்க முடியாது. எழுத்து வடிவு சாஸ்திரப் பிரகாரம், அந்த கிரந்தங்கள் சுமார் நாலாவது அல்லது ஐந்தாவது நூற்றாண்டில் எழுதி யிருக்கலாமென்று கூறுகின்றனர். உலகத்தின் சரித்திரத்திற்கு அதிகம் உபயோகப்படாது. முதலில் ஆரியபட்டர் என்கிற ஒரு வான சாஸ்திரி, தான் எழுதிய கிரந்தத்தில் 499 A. D. அதாவது ஸம்வஸ்ரம் என்கிற வொரு ஆண்டைக் குறிப்பிட் டிருக்கிறார். பிறகு வராக மிகிரர் என்கிற ஒரு ஜோசியர், 505 A. D. ஸம்வஸ்ரத்தைச் சொல்லி யிருக்கிறார். பிறகு வராக மிகிரர் கிரந்தங்களை வியாக்கியானம் செய்த பத்தாவது நூற்றாண்டில் வந்த படோத்பலர் என்கிற ஒரு ஜோதிட சாஸ்திரி, தன் புஸ்தகத்தில் மேற்படி ஆண்டைக் கூறி யிருக்கிறார். இந்த வித்துவான் கிரீஸ், ரோம் முதலான தேசங்களிலுள்ள ஜோதிட புஸ்தகங்களை நன்றாகப் படித்தவரும், அந்த தேசங்களிலுள்ள வித்துவான்களை ஆசாரியராகப் பாவித்தவரும் ஆவர். பிறகு வந்த அனேக வித்துவான்கள், தாங்கள் எழுதிய கிரந்தங்களில் காலக் குறிப்பைக் காண்பித்திருக்கிறார்கள். அக்காலத்தில் அவர்களுடைய கிரந்தங்களை நகல் எடுத்த வித்

வான்களும் தாங்கள் எழுதிய காலத்தைக் கிரந்த முடிவில் சொல்லி யிருக்கிறார்கள். அது மாத்திரம் அல்ல. எழுதியவர்கள் வம்சம், ஊர், அரசன், மாதம், தேதி, நக்ஷத்திரம், வாரம், முதலானவைகளைப் பதிவு செய்திருக்கிறார்கள். இந்த விஷயம் நம் சரித்திரத்திற்கு வெகு உபயோகம். தவிரவும் இந்தத் தேதி முதலானவைகளைக் கப்பலோட்டிகள் பஞ்சாங்கத்தின் (Nautical Almanac) மூலமாகப் பரிசோதித்தால், அவ்வளவும் சேர்ந்ததினம் வெகு சரியாக வருகின்றது. கணிதசாஸ்திரத்தில் தவறுதல் இராதன்றோ? ஆனால் இவ்விதம் 11 முதல் 14 நூற்றுண்டு வரையில் எழுதிய கிரந்தங்கள் சுத்தமாகக் கிடைக்கிறதில்லை. 15-ம் நூற்றுண்டு முதல் எழுதிய கிரந்தங்களே சாஸ்தியாக அகப்படுகின்றன.

கிரந்தங்களின் பிரதி எழுதினவர்களின் யோக்கியதை:— 11-ம் நூற்றுண்டு முதல் 14 வரை பிரதி செய்தவர்கள் எல்லாரும் வித்துவான்கள்; பிரதி எழுதிய கிரந்தங்களும் தங்கள் படிப்புக்காகவே. ஆகையால் அந்தப் புஸ்தகங்களில் அனேகமாகத் தப்புக்கள் கிடையாது. தவிரவும் எழுதக் கூடிய காகிதங்களும் சுருக்கமானபடியால், எழுத்துக்களைச் சுருக்கமாகவும் பொடியாகவும் எழுதினார்கள். சில காலங்களில் கிரந்தம் எழுதுகிறவர்கள் எழுதுகிற சக்தியில் தேர்ந்தவர்களாகி, எழுதுவதை ஒரு (Art) கலையாக அப்பியாசம் செய்தார்கள். தவிர ஒரு பக்கத்தில் 20 வரியும் ஒரு வரியில் 100 எழுத்துக்களுமிருந்தால், அதே மாதிரி அப் புஸ்தகம் முழுவதும் காணப்படும். அதில் தவறுதலே இராது. இவ்விதமான ஒரு பிரதி அகப்பட்டால் அதை நம்பி உடனே அச்சில் போடலாம். பிழைகளும் கிடையாது. 15-வது நூற்றுண்டு முதல் 17-வது வரை கொஞ்சம் கொஞ்சம் பிழைகள் ஆரம்பித்தன. வித்துவான்கள் கர்வமடைந்து எழுத்துக் கூலிக்காரர்களை நியமித்தார்கள். ஆனால் அப்படிக் கூலிக்குப் பிரதி செய்தவர்கள் கொஞ்சம் படித்தவர்கள். தவிரவும் படிப்புக்காகவே கிரந்தங்கள் எழுதப்பட்டன. ஆகையால் வரிகளில் பிழை திருத்தம் முதலியன காணப்படும். எழுதுகிற அழகும் குறைந்து விட்டது. 18-வது நூற்றுண்டில், படிப்பற்ற பெரியோர்கள், அபிமானத்திற்காகவும் கியாதிக்காகவும் படிப்பற்ற கூலிக்காரர்களை நியமித்துக் கிரந்தங்களை பிரதியெழுதச் சொன்னபடியால், அந்தக் காலங்களில் பிரதி செய்த ஏடுகளை வைத்துக்



கொண்டு இப்பொழுது அச்சுப்போடவே முடியாது. சில வாக்கியங்களில் பாஷை ஸம்ஸ்கிருதமோ வென்ற சந்தேகமும் ஏற்படும். 19-ம் நூற்றுண்டின் முதற் பாகத்தில் கொஞ்சம் எழுத்து நடந்திருக்கலாம். பிறகு அச்சு வந்து விட்டது. பின்பட்ட ஈனஸ்திதியான காலங்களிலும், அபூர்வமாக சில வித்வான்கள் தங்கள் கௌரவத்தை விட்டு, தாங்களே பிரதி செய்திருக்கிறார்கள். இவற்றில் எழுத்துப் பிசகு கிடையாது; ஆனால் எழுத்து பிறர் வாசிக்க முடியாது. இவ்விதமாக எழுதியவர்களின் யோக்கியதை அவர் அவர் எழுத்து மூலமாக ஊகிக்கப் படுகிறது.

## எழுத்துக்களின் விவரம்.

நமது பரத கண்டத்தில் வழங்கும் எழுத்துக்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அதாவது (1) நாகரம் (2) தெலுங்கு (3) கிரந்தம். நாகர எழுத்தை இப்பொழுது வழங்கிவருகிற வடக்கு தேசத்து எழுத்துக்களுக்குத் தகப்பனைச் சொல்லலாம். அதாவது நாகர எழுத்துத் தெரிந்தவர், யுக்தியினாலும் பழக்கத்தினாலும் கீழே குறிப்பிடுகிற தேச எழுத்துகளைப் படிக்க முடியும். (1) காச்மீரம் (2) பஞ்சாபிலிருக்கிற ஸிக்மத கிரந்தங்களை எழுதிய குருமுகி யென்னும் பெயருடையது. (3) நேபாலம். 4. வங்காலம். 5. ஆஸ்ஸாம். 6. மைதிலீ. (4-5-6. ஒன்றாகச் சொல்லலாம்.) 7. குஜராத். 8. நந்தி நாகரம். (இது மைசூருக்கு மேல் பாகத்திலும் உடுப்பி முதலான இடங்களிலும் பரவியிருக்கிறது).

II. தெலுங்கு (2) கன்னடம் (3) உரியா. சிலர் உரியா எழுத்துக்கள் தெலுங்குடன் சம்பந்த மில்லை யென்று அபிப்பிராயப்படு கின்றார்கள்.

III. கிரந்தம், மலையாளம்—இவ்விரண்டும் ஒரே ஜாதி.

இந்த மூன்று பிரிவுகளில் எந்தப் பிரிவு ஆதி காலம் முதல் இருந்த தென்று ஒருவராலும் சொல்ல முடியாது. எழுத்துக்களுடைய வடிவைக் குறித்தெழுதிய சாசனங்கள் இதுவரை அகப்படவில்லை. அதாவது அ.க.ச. முதலானவை இன்ன ஆகாரமா யிருக்கவேண்டுமென்று குறிப்பிட்ட புஸ்தகங்கள் இருப்பதாகவும் தெரிய வில்லை. சிலர் தென் தேசத்தில் ஓம் என்ற எழுத்து கணபதியின்

வடிவு போன்றதென்று சொல்லுவர். அதற்கு ஆதாரம் சாக்ஷிகளில் காணவில்லை.

எழுத்து இல்லாததினால் நாகரிகக் குறைவென்று சிலர் நினைக்கிறார்கள். அப்படிச் சொல்ல முடியாது. ஒருவர் மனத்திலுள்ள அபிப்பிராயத்தை கொஞ்சம் புத்திக் குறைவாக இருக்கிறவர்களுக்கு நேரிலும், வெகு காலத்திற்குப் பிறகும், வெளிப்படுத்தவே எழுத்துக்கள் ஒரு கருவியாகின்றன. இதன் பொருட்டு நாகர எழுத்துக்களை நம் ஆரியர்கள் முதலில் உண்டாக்கினதாகத் தெரிய வருகிறது. உதாரணமாக: ஒருவன் நடக்கிறான் என்கிறதை, நடை இரண்டு கால்களின் வேலையானதினால், கால்களின் வடிவை-க-மு-என்கிற அக்ஷரத்தை (ग) ஓர் அடையாளத்தினால் குறித்தனர். இதில் ஒருகால் சிறிதும் மற்றொன்று பெரிதுமாக விருக்கிறது. இப்பொழுதும் மனிதன் இரண்டு கால்களிலும் சமமாக நிற்கிறதில்லை. முகத்தைக் குறிக்க (म) என்கிற எழுத்து ஒரு பக்கமுகமாக (Side face) வந்தது. கையைக் குறிக்க ஹ (ह) என்கிற எழுத்து, வேலைசெய்கையில் முடங்குகிற கையைப் போலக் காட்டுகிறது. காதைக் காட்ட, கர்ணம் என்கிற (क) அக்ஷர வடிவை அடைந்தது. இவ்விதமாக முதலில் சில சரீர அங்கங்களைக் கொண்டு, அந்தந்த அங்கத்தின் தொழிலை, எழுத்துக்களால் நம் பூர்விகர்கள் காண்பித்தார்கள். பிறகு நாகரிக வியாபகத்தினால் அ முதல் ஹ வரையிலுள்ள அக்ஷரங்களும், அவற்றின் வடிவு அழகுகளும் காலக் கிரமத்தில் ஏற்பட்டன. பிற்பாடு வேலைகளும் நாகரிகமும் சாஸ்தியாக, அவற்றைக் குறிக்க, ஒரே அங்கத்திற்கு, அதன் சில வேலைத் தொடர்ச்சியை வைத்து, அனேகம் பெயர்கள் வந்தன. கடைசியில் காலக்கிரமத்தினால் பெயர்கள் ஸங்கேதமாக, தொழிலின் அர்த்த மில்லாமலும் அனேக எழுத்துகள் சேர்ந்து ஒரு பதார்த்தத்தைக் காண்பிக்கிறதாக ஏற்பட்டது. திருஷ்டாந்தமாக, ம (म) என்கிற எழுத்து முகத்தைக் குறிப்பிட்டிருந்ததை, மு க என்கிற இரண்டு எழுத்துக்கள் காட்டுகின்றன. இவ்விதமாக அடையாளத்தினால் நம் முன்னோர் வெளிப்படுத்திய எழுத்துக்களுக்கு, (எழுத்துவடிவு) ஆகார சாஸ்திரமென்று (Hieroglyphics) பெயர் வந்தது. நம் ஆரியர்கள் உச்சாரணத்தினாலும் உபதேசத்தினாலும் நம் வேத சாஸ்திரங்களை வெகு காலமாகப் பரிபாலித்து வந்தபடியி



னால், எழுத்து வடிவு சாஸ்திரத்தைக் கவனிக்க வில்லையென்று தெரிகிறது.

இவ்விதமாக நம் தேசத்தில் நெடுநாளாக விளங்கி வருகிற தெலுங்கு கிரந்தம் முதலான இடமிருந்து வலம் எழுதிய எழுத்துக்களும், வலமிருந்து இடது பக்கமாக எழுதுகிற அரபி உருடு முதலான கோடு பொட்டு முதலான அடையாளங்களால் வந்த அக்ஷரங்களும், அப்படியே சீனா ஜப்பானிலிருந்து மேலிருந்து கீழ் எழுதுகிற எழுத்துக்களும் வந்த விதத்தை, வித்துவான்கள் ஊகித்துச் சில யுக்திகளை அவர்கள் எழுதிய புஸ்தகங்களில் காண்பித்திருக்கிறார்கள். (தொடரும்)



# இரங்கற்பா



### *தாயார் இறந்தபோது பிரிவாற்றாத மகன்பாடிய கலிவெண்பா*

ஸ்ரீ. சி. தா. அமிர்தலிங்கம்பிள்ளை, யாழ்ப்பாணம்

மாதமொரு பத்து வயிற்றிற் சுமந்திருந்து
காதலுடன் பெற்றுக் கனகமுலை—ஆதாவாய்த்
தந்து வளர்த்துத் தமியேன் பிணியுறுங்கால்
நொந்தெனது நோயகல நோன்புபுரிந்—தெந்தை
சிவபெருமான் பாதமலர் சேவித்துக் கண்ணீர்
புவிநனைய ஆறாய்ப் பொழிந்து—கவனமுடன்
அப்பா மகனே அருமணியே தேனேயென்
றிப்பாரிற் பன்மருந்தும் ஏழையெனக்—கெப்போதும்
ஊட்டி வளர்த்தென் உறுநோய் களைந்தபின்னர்
வாட்டமுகம் கஞ்சம் மலர்ந்ததென—நாட்டமுடன்
இன்பஞ் சொரிய எனையணைத்து முத்தமிட்டென்
அன்பின் மகனேயென் றாசையுடன்—இன்பமொழி
சொல்லி அமுதூட்டித் துன்பம் துடைத்தருளி
அல்லும் பகலுமெனக் காதாவாய்க்—கல்லுருக

நாயேற்குப் புத்திமதி நாளும் நவின்றருள்என்
தாயே! பிரியமனம் தாங்கிற்ருே—பேயேனை
விட்டாயோ நின்னுயிரை விட்டாயோ ஈசனடி
தொட்டாயோ என்றும் சுகம்பெறவே—இட்டாய்என்
அம்மா கவலே அறியேன் தலைமீ தென்
அம்மா உனைப் பிரிந்தும் ஆறுவனோ—அம்மாஎன்
ருரும் அலறி அழவிட்டுப் போனுயோ
சீருடனே பொன்னுலகிற் சேர்ந்தாயோ—ஒருதவி
இல்லாது செய்தனையோ என்னே உனைப்பிரியக்
கல்லாஎன் பாழ்மனந்தான் கண்மணியே—பொல்லாத
பாவியேன் நின்று பரிதபிக்க விட்டுன்றன்
ஆவிசிவன் பாதம் அடைந்ததோ—பூவுலகில்
அன்னை எனக்கூவி அழைக்குந் திருநாளொன்
றென்னே இனிவருவ தென்று கொலோ—அன்னைஉனை
எப்பிறப்பிற் காண்பேனோ என்தாய் உனைப்பிரிந்தும்
இப்பிறப்பில் இன்னும் இருப்பேனோ—ஒப்பரிய
தாயே துயரம் தலைமயங்க வைத்தனைஎன்
தாயேயான் இத்துயரம் தாங்குகிலேன்—நாயேன்யான்
என்செய்வேன் ஆற்றுகிலேன் என்செய்வேன் ஆற்றுகிலேன்
என்செய்வேன் ஐயையோ என்தாயே—முன்செய்த
தீவினையோ அம்மா சிறியேன் உனைஇழந்து
பூவுலகில் நின்று புலம்புதற்குப்—பூவுலகம்
பொய்யோ உயிர்கள்எல்லாம் போகுநாள் ஒன்றுண்டோ
ஐயோ உனைப்பிரிந்தும் ஆறுவனோ—ஐயோஉன்
மைந்தர்எலாம் நின்றருகில் மாதாவே என்றலற
அந்தரமாய் ஆவிஅகன்றதோ—சிந்தை எலாம்
எம்பெருமான் பாதத் திருத்தினையோ ஆவிஅவன்
செம்பொற் பதநிழலிற் சேர்த்தனையோ—உம்பர்தொழும்
ஒற்றியூ ரன்பதமே உற்றதுணை என்றுய்ந்து
பற்றினையோ அன்னேன் பதாம்புயத்தை—நற்றருமம்
என்றும் நிறைந்தெவர்க்கும் இல்லையென நல்லகுணக்
குன்றமே அன்னம்இடக் கோதை—நின்றயையை
எல்லாரும் நின்றுபுகழ்ந் தேத்தப் பரம்பொருளிற்
சொல்லாமற் பெற்ருய் சுகம்.



# தட்சிண சரித்திர வீரர்

## 1. தளவாய் அரியநாத முதலியார்

### 4. தலைக்கோட்டைச் சண்டை

(760-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

பீரங்கிகளின் செப்புமாரிக்குப் பயந்து ஹிந்துக்கள் ஓடுவதைக் கண்ட நிஜாம்ஷா, பீரங்கி வரிசைகளின் இடையிடையே சென்று தாக்கும்படி 5000-குதிரைப் படைகளை ஏவ, அவர்கள் வந்து கொடுங்கொலை புரியலாயினர். இவற்றையெல்லாம் கண்ணுற்ற இராமராயர் தன் தைரிய நிலை கலங்கித் தடுமாற்ற முற்ருர். தன் இருபக்கலிலும் தன் தம்பிமார் திருமலையும் வேங்கடாத்திரியும் போரில் வெற்றி பெற்றுத் தம்மை எதிர்த்த முகம்மதியர் பின்னிடும்படித் துரத்தியதை அவர் அறிந்திலர். இராமராயர் யானை மீதிருக்கும்போதும், அவர் அதை விட்டிறங்கிப் பல்லக்கேறிய போதும், அவர் இருக்கும் இடத்தையே கவனித்து வந்த நிஜாம்ஷா, அவ்விடத்தை நோக்கித் தன் படை வீரருடன் சென்ருர். நிஜாம்ஷாவின் போர் யானையும் படைவீரர்களும் பல்லக்கை அணுகவே, போகிகள், திகிலுற்றுத் தம் பல்லக்கைக் கீழே வைத்து, ஓடி விட்டனர். அதை யறிந்த இராமராயர் பல்லக்கை விட்டிறங்க, அருகி லிருந்த ஒரு குதிரை வீரன், அவர் ஏறி ஓடித் தப்பிக்கொள்ளும்படி, குதிரையை விட்டிறங்கித் தன் குதிரையை அவருக் குதவினன். இராமராயர் குதிரை ஏறிய கணமே நிஜாம்ஷா அவரை நெருங்கி யடைந்து, "இதோ என் பழியைத் தீர்த்துக் கொள்கிறேன்; இனி, அல்லா எனக்கு என்ன வேண்டினும் செய்யட்டும்!" என்று கர்ச்சித்துக்கொண்டே, தன் வாளால் இராமராயர் தலையை வீசிவிட்டார்.

இராமராயரின் அற்று விழுந்த தலையை ஒரு வேலின் முனையில் தூக்கி, இருபுறப் படைகளும் பார்க்கும்படி உயர்த்திக் காட்டவே, முகம்மதியர்கள் பெருமகிழ்ச்சியையும் உற்சாகத்தையும், ஹிந்துக்கள் விசனத்தையும் திகிலையும் அடைந்து, அவர் துரத்திக் கொல்லவும், இவர் சீர்குலைந்து நடுநடுங்கி விஜயநகரத்தையும் மற்றிடங்களையும் நோக்கி ஓடவும், ஆரம்பித்தனர். அதுகாறும் திருமலையும் வேங்கடாத்திரியும் உற்றிருந்த வெற்றியும் பயனற்றதாகி, அவர்கள் படைகளும் புறங்காட்டி யோடிவிட்டன. இராமராயரை யன்றி, வேங்கடாத்திரியும் போர்க்களத்தில் மடிந்து வீழ்ந்தார். அன்று முகம்மதியரின் கைகளால் மாண்ட ஹிந்துப் படைவீரர் நூருயிரம் பேர்க்கு மேல் என்பர்.

"விருதர் இருதுணி பார் நிறைந்தன ;
விடர்கள் தலைமலை வான் வளர்ந்தன ;
குருதி குரைகடல் போல் பரந்தன ;
குடர்கள் குருதியின் மேல் மிதந்தவே !"

அந்தக் களத்தைக் கொள்ளையாடிய முகம்மதியப் படையாட்கள் ஒவ்வொருவரும் ஏராளமான செல்வத்தை யடையும்படி, சுல்த்தான்கள், போர் யானைகள் தவிர மற்றெல்லாவற்றையும் அவர்களுக்கே விட்டுவிட்டனர்.

அருந்திறல் வீரர்களின் தலைமைக்கீழ்ச் சேனைசமுத்திரத்தைப் போர்க்கனுப்பிய விஜயநகரம், அமைதியாய் அச்சமற்றதாய் விளங்கிக் கொண்டிருக்கையில், பேரிடி விழுந்தாற்போல, இராமராயரும் வேங்கடாத்திரியும் மடிந்து படைகள் முறியுண்டு தோற்ற செய்தி எட்டியது. முதலில் எவருமே நம்பிலர் ; அப்பால், அரியநாதர், திருமலை, இராயர் குடும்பத்தினர் பிறர், தளகர்த்தர் படைவீரர்கள், எல்லோரும் வந்தடைந்த பின்பே, தோல்வி உறுதியென நம்பினர். அப்பொழுதும், விஜயநகரக் கோட்டையின் பலத்தையும், நகரவாசிகளின் பெருந்தொகையையும், இன்னும் மாளாது மீந்துள்ள படைகளின் பெருமையையும் எண்ணி, அரியநாதரும் வேறு சிலரும், ஊக்கத்தையும் உறுதியையும் கைவிடாது, நகரத்தைக் காப்பதே கடனெனக் கருதினர். ஆயின், இராயர் குடும்பத்தைச் சேர்ந்த எவருமே இதற் கிணங்கிலர். தன் அண்ணனும் தம்பியும் இறந்த பின்பு தானே தலைவராகிவிட்ட திருமலைராயர், பொம்மை மகாராயரான சதாசிவரையும், இராயர் குடும்பத்தைச் சேர்ந்த ஆண் பெண்கள் அனைவரையும், கைக் ககப்பட்ட ஐசுவரியங்களையும் பொன் மணிகளையும், ஸம்ஸ்தான முத்திரைகள் விருதுகளையும், நவரத்ன கசிதமான சிம்மாசனத்தையும், ஐந்நூற்றைம்பது யானைகளின் மீது ஏற்றிக்கொண்டு, தென்பாலுள்ள பெனுகொண்டா கோட்டையை நோக்கி ஓடிவிட்டார். ஒரு சாமப் பொழுதிற்குள் இவ்வண்ணம் திரட்டி அவர் கொண்டுபோன பொன் மணிகள் மட்டும், பத்துக்கோடிப் பவுனுக்கு மேலிருக்கு மென்று மதிப்பிட் டிருக்கின்றனர்.

இதைக் கண்ட அரியநாதர், என்செய்வ தென்று அறியாது திகைப்புற்று, இராமராயர் போர்க்களத்தில் மடியுமுன் ஸம்ஸ்தானமே தன் அடைக்கல மென்று ஒப்புவித்ததை நினைந்து, அவர் கட்டளையின்படி, தான்



மகாராயரா்கி மகுடம் புனைந்து விஜயநகரத்தைக் காக்கக் கருதி, தன் உறவினரோடும் குருவோடும் ஆலோசனை செய்தார். பரம்பரையான ராஜவமிசத்தாரே பயந்தோடிவிட்டதைக் கண்கூடாகப் பார்த்த அவர் உறவினர், அதற்கிணங்க வில்லை.

அவர் குரு : "இதென்ன கலியுக நீதி ! மகாயுத்தம் சம்பவித்தால் வர்ண சங்கிரமும் உண்டாகிவிடு மென்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையிலே சொல்லியிருப்பது, இதைத் தானோ? என்றேனும் எங்கேனும் பூவைசியர்களான வேளாளர்கள், கிருஷித்தொழிலைக் கைவிட்டு, மகுடாபிஷேகம் செய்துகொண்டு, சிம்மாசனத்தி லிருந்து ராஜ்யபரிபாலனம் செய்ததுண்டோ? இது கண்ணால் கண்டது மில்லை, காதால் கேட்டது மில்லை.

(1) "பரிசர்யாத்மகம்கர்மா சூத்ரஸ்யாபிஸ்வபாவஜம்" என்று பிரதமத்திலே சொல்லிவிட்டு,

(2) "ஸ்வேஸ்வேகர்மண்யபிரதஸ் ஸம்ஸித்திம் லபதேநர :" என்றும் ;

(3) ச்ரேயான் ஸ்வதர்மோவிகுணப் பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத்" என்றும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவானவர் கீதையிலே சொல்லி யிருக்கிறார்.

இது ஒரு நாளும் நியாயமாகாது ; இதற்கு நான் ஸம்மதிக்கவே மாட்டேன்" என்று, வற்புறுத்திக் கூறினர். இதற்கேற்ப, மகாராயரோடும் இராஜகுடும்பத்தோடும் திருமலைராயர் ஓடிப்போய்விட்டதைக் கண்ட நகரமாக்களும், மனங்கலங்கி, உறுதிநிலை தளர்ந்து, அரியநாதரின் உத்தேசத்துக்கு அநுசரணையா யில்லை. இதனால், இயன்றவளவேனும் ஸம்ஸ்தானத்தைக் காப்பாற்றும் பொருட்டு, அரியநாதரும் பெனுகொண்டா செல்லும்படி யாயிற்று.

---

1. "மற்ற மூன்று வருணத்தாருக்கும் ஊழியம் செய்வது சூத்திரருக்குச் சுவபாவமா யுண்டான கருமமாயிருக்கிறது."

2. "அவனவனுக்கு விதித்திருக்கிற கருமத்தில் சிரத்தையை உடைய மனிதன் ஞானயோக்கியதையை அடைகிறான்."

3. "தன்னுடைய கருமமானது குணமற்றதான போதிலும், கிரமமாய் அநுஷ்டிக்கப்பட்ட பிறருடைய கருமத்தைக் காட்டிலும் சிரேஷ்டமானது."



விஜயநகரம்—யானைக் கொட்டகை



இவ்வண்ணம் தலைவர்கள் அனைவராலும் கைவிடப்பட்ட குடிகளில் தத்தமக்குரிய சங்கம சொத்துக்களைக் கொண்டு தப்பியோடியவரைத் தவிர எஞ்சியவர், தம் ஆபரணாதிகளைப் பூமியில் புதைத்துவிட்டுத் தம்மாலியன்றமட்டும் நகரத்தைக் காக்கச் சித்தமாயிருந்தனர். ஆயின் போர்ப் பழக்கமில்லாத உழவர்களும் வர்த்தகர்களும் சுகஜீவிகளும் என்செய்யலாகும்? மறுநாளே சுற்றுப் பக்கங்களிலுள்ள லம்பாடிகள் குறும்பர்கள் ஆதிய கள்ளர் குழாங்கள் வந்து புகுந்து, நகரத்தைக் கொள்ளையாடத் தொடங்கின. மூன்றுநாள் முதல், வெற்றி வெறியும் பழிக்குப் பழிவாங்கும் பகைமையும் மதத்துவேஷமும் குடிகொண்டு குதித்தோங்கும் நெஞ்சினரான முகம்மதிய எதிரிகள் வந்தடைந்து, யமனையே போல் கண்ணோட்டமேனும் பாரபக்ஷமேனும் இல்லாதவராய், ஊழிகால உருத்திரனையே போல் அனைத்தையும் அழிப்பவராய், கொலையையும் கொள்ளையையும் அழிம்புகளையும் தொடங்கி, ஐந்து மாதகாலம் நிகழ்த்தினர்.

தாம் கொய்துகொண்ட இராமராயரின் தலையைப் பதனிட்டுச் சேமித்துவைத்து, தலைக்கோட்டைச் சண்டையின் ஆண்டு நிறைவன்று அதற்குச் செஞ்சாந்தும் எண்ணெயும் பூசி, 1829-ம் ஆண்டு வரை, அஃதாவது இருநூற் றைம்பத் தைந்து வருஷங்களாக, ஆண்டுதோறும் அத்தலையை ஆமதுநகரத்து நிஜாம்ஷாவின் சந்ததியார், மற்ற முகம்மதியர்களுக் கெல்லாம் காட்டிவந்தமையும்; இன்றைக்குமே காணும்படி, பீஜபுரத்துக் கோட்டைச் சாக்கடையின் தூம்பாய் முகத்தில், இராமராயர் தலையைப் போல் கல்லாலடித்து வைத்திருக்கின்றமையும், அவர் மீது முகம்மதியருக்குள்ள க்ஷாத்திரத்தின் கடுமையையும், முன்னாளைய நாகரிகப் போக்கையும் ஒருவாறு விளக்கும்.

"கறுத்தின்னா செய்தஅக் கண்ணும், மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்"

ஆவதன்றி, சாமானிய மனிதர் ஒழுகும் முறை யன்றென்பதையும்;

"மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்,
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு"

என்பதன் மெய்ம்மையையும், விஜயநகர ஸம்ஸ்தானத்து ஹிந்துக்கள் நன்குணர்ந்தனர்.

திருமலைராயரின் பின்னரே பெனுகொண்டா சென்ற அரியநாதர், விஜயநகரத்தின் அழிவையும் ஸம்ஸ்தான முற்ற சீர்குலைவையும் கருதி, திருமலைராயரோடு கலந்து கொண்டு, இவ்விதக் கேடுகள் பின்னும் நேராமல் தடுத்தற்குரிய ஆலோசனையைச் செய்து முடித்தார். கிருஷ்ண தேவ மகாராயரைப் போன்ற ஆன்ற சூழ்ச்சி அருந்திறல் வீரருக் கன்றி, ஒரு குடைக்கீழ் ஒடுக்கியாளுதல் எளிதில்லா அளவு அகன்று பெருகி யுள்ள ஸம்ஸ்தானத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து, பெனுகொண்டாவைத் தலை நகராக்கி, சிம்மாசனாதிபதியா யாங்கிருந்து மகாராயர்ப் பட்டத்துடன் ஆள்பவர், முகம்மதியர் தொந்திரை செய்யாது வடவெல்லையைக் காப்ப தென்றும்; சீரங்க பட்டணத்தை ராஜதானியாய்க் கொண்டு ஒருவர் மேலமலைத் தொடர்க்கு அப்பாலுள்ள பிரதேசங்களை ஆள்வ தென்றும்; சந்திரகிரியை ராஜதானியாய்க் கொண்டு ஒருவர் மலைத்தொடர்க்கு இப்பாலுள்ள சேர சோழ பாண்டிய தொண்ட மண்டலங்களைக் கண்காணிப்ப தென்றும்; பின்னிருவரும் முன்னவர்க்கு அந்தஸ்தில் கீழாகி, அவரது பிரதிநிதிகளா யாளுவ தென்றும்; இம்மூன்று பிரிவுகளடங்கிய ஸம்ஸ்தானத்தின் தளவாய்ப் பட்டம் அரியநாதருக் கென்றும் தீர்மானித்தனர். இங்ஙனம் முடிவு செய்த பின்பு, அரியநாதர், அடுத்த ஆண்டின் இறுதியில் தெற்கே திரும்பிவந்து, மீனாக்ஷிசுந்தரேசுரரைத் தரிசனம் செய்துகொண்டு, மதுரையில் தானே தங்கி, மதுரை நாயகரின் ஆட்சிக் குட்பட்ட நாடுகளைக் கண்காணித்து வந்தார்.

## 5. "சுற்றந்தழால்"—வாழ்நாள் மாலை.

விசுவநாதர் இறந்து அரியநாதரும் அவசரமாய் விஜயநகரஞ்சென்றதைக் கண்ட தும்பிச்சி நாயக்கன் என்னும் பாளையக்காரன், பாளையப்பட்டுக்களுக்குள் தனக்கு அளித்துள்ள பதவி தன் பெருமைக்குப் போதா தென்று சினந்து முணுமுணுத்துக் கொண்டிருந்தவன், அதுவே தக்க சமயமெனத் துணிந்து, குமார கிருஷ்ணப்ப நாயகரின் அதிகாரத்தை மீறிக் கலகஞ் செய்யத் தொடங்கி, பரமக்குடிக் கோட்டையைத் தன் பாசறை யாக்கிக் கொண்டு, சூழ்ந்துள்ள ஊர்களைச் சூறையாடலானான். அதை யறிந்த



கிருஷ்ணப்ப நாயகர், அரியநாதர் நாட்டி லில்லாமையால் தளவாயா யிருந்த பெரிய கேசவப்ப நாயக்கரை அவனை யடக்கும்படி அனுப்ப, தும்பிச்சி அவரைப் போரில் கொன்றுவிட்டான். அப்பால் அவர் மகன் சின்ன கேசவரையும், பதின்மூன்று பாளையப் பட்டாரையும், படைகளையும் கோட்டையைத் தகர்க்கச் சில பீரங்கிகளையும் அனுப்பினர். சின்ன கேசவர் தும்பிச்சியை வென்று சிறை செய்ய, அரசர் ஆக்கினையின்படி அவன் சிரச்சேத முற்றான். அப்பால், கிருஷ்ணப்ப நாயகர், அவன் பாளையத்தில் பெரும்பகுதியைப் பிடித்துக்கொண்டு, பரமக்குடி பேராம்பூர் முதலிய சில ஊர்களைமாத்திரம் ஒரு சிறு பாளையப்பட்டாக்கி, தும்பிச்சியின் மக்கள் இருவர்க்கும் அதைக் கருணைகூர்ந்து கொடுத்தார்.

ஈழ நாட்டிலேயுள்ள கண்டிராஜன், தும்பிச்சி நாயக்கனது நண்பன், தன் சிநேகிதன் கொலையுண்டதைக் கேட்டுச் சகியாது கோபங்கொண்டு, குமார கிருஷ்ணப்ப நாயகரைப் பழித்து வெறுத்து, "யானை கண்டியி லிருக்க, அதன் தும்பிச்சிக்கையை வெட்டி விட்டேனென்று வீம்பு பேசும் வீரரே இவர்!" என்று, அவரை ஏளனமாகப் பேசினான். அதை யறிந்த கிருஷ்ணப்ப நாயகர்: "ஓகோ! ஈழநாட்டானுக்கு இவ்வளவு கொழுப்போ? கண்டியானையும் தண்டித்து, அவன் தும்பிச்சிக்கையை மாத்திரமோ, முடித்தலையையும் துண்டித்து விடுகிறேன், பார்!" என்று சபதம் செய்து, ஐம்பத்திரண்டு பாளையக்காரரையும் அளவற்ற படைகளையும் திரட்டிக் கொண்டு, இப்பொழுது தேவிபட்டணம் என்று வழங்கும் நவபாஷாணத் துறையில் நாவாயேறி, ஈழத்திலே மன்னாரில் இறங்கி, "உடனே கப்பத்தோடு வந்து காலில் விழுக; அல்லது போர்க்கெழுக" என்று, கண்டி மன்னனுக்குத் தூதனுப்பினர். இத் தூதினைக் கேட்ட கண்டிராஜன், மந்திரிகள் நால்வரையும் தேசநாதர்கள் எண்மரையும், நாற்பதினாயிரம் படைவீரருடன் போர்க்கனுப்பினான். தும்பிச்சியைச் சிறை செய்த சின்ன கேசவர், இருபதினாயிரம் படைவீரரையே கொண்டு, தன்னதினும் இருமடங்கு பெரிய அப் படையைப் புத்தளத்தில் நிகழ்ந்த போரில் முறியடித்து, மந்திரிகளில் இருவரையும், தலைவர்களில் ஐவரையும், படைவீரர் பலரையும் சிறை செய்து கொண்டார். இவ்வண்ணம் சிறையுற்ற கண்டிவீரர், குமார கிருஷ்ணப்பர் தம்மைக் கருணையோடும் மரியாதையோடும் நடத்தினதைப்

பாராட்டி, அவருடன் சமாதானமாகும்படித் தம் மன்னவனுக்குப் புத்திகூறியும், அவன் இணங்க வில்லை. பின்னும் அறுபதினாயிரம் படைவீரரையும் பதினாயிரம் காபிரிகளையும் அவன் திரட்டிக்கொண்டுவர, கண்டியார்க்கும்பாண்டியார்க்கும்கடும்போர் நிகழ்ந்தது. அந்தச்சண்டையிலே எண்ணாயிரம் சிங்களவரும் எண்ணாயிரம் காபிரிகளும் மாண்டனர்; கிருஷ்ணப்பநாயகரும் சின்னகேசவரும் உயிரோடு பிடிக்க எவ்வளவு முயன்றும் பயன்படாமல், தோல்வியினும் வீரசுவர்க்கத்தையே விரும்பிய கண்டிராஜனும், அக்களத்திலே பட்டு வீழ்ந்தான். அப்பால், பாண்டிநாயகருக்குத் திறை செலுத்தும் உள்நாடாகக் கண்டிராஜ்யத்தை யாண்டு வரும்படித் தன் மைத்துனர் விஜயகோபால நாயகரைப் போதிய படைகளுடன் ஈழத்திலே இருத்திவிட்டு, எஞ்சிய தண்டுகளுடன் கிருஷ்ணப்ப நாயகர் மதுரை மீண்டார்.

மேலே கூறிய போர் நிகழ்ச்சிகள் யாவும், தளவாய் அரியநாத முதலியார் அக்ஷய வருஷத்திலே (1566-67), மதுரை மீளுமுன்னரே நிகழ்ந்தனவாக, அவற்றைக் கேட்டு அவர் அகமகிழ்ந்து, தன் அருமை நண்பரின் மைந்தரை மெச்சிப் புகழ்ந்தார்; தான் ஏற்படுத்திய பாளையப் பட்டுக்கள் ஆபத்துக்காலத்தில் நாட்டுக்குத் தாரகமானதை அறிந்து பெருமகிழ் வெய்தினர்.

அப்பால் அரியநாத முதலியார்,

"சுற்றத்தால் சுற்றப் படஒழுகல், செல்வம் தான்
பெற்றத்தால் பெற்ற பயன்."

என்னும் குறளை நினைந்து, தொண்டமண்டலத்திலே, மெய்ப்பேடு, பெருநாடு முதலிய ஊர்களிலுள்ள தம் இனத்தாரைப் பாண்டிக்கு வரவழைத்து, சோழவந்தான், நகரி, திருமங்கலம், புத்தனேரி முதலிய கிராமங்களில் அவர்களைக் குடியேற்றி வைத்தார். சோழவந்தானிலே அவர்களுக்கென்றே முந்நூறு வீடுகளும், தன் குலகுருவுக்கென்று ஒரு மடமும் வீடும், ஊரைச்சுற்றி "முதலியார் கோட்டை" என்னும் கோட்டையும் கட்டி, புதிதாய்க் குடிவந்தவர்களின் சுகசௌகரியங்களுக்கு இன்றியமையாத அடிமைகள், உழவர்கள், கருமான்கள், மற்றத் தொழிலாளிகள் யாவரையும் வேண்டியவாறு குடியேற்றி வைத்தார். இவையன்றி, நாட்டிலே ஆங்காங்குள்ள பழைய கோயில்களைப் புதுப்பித்தும், வேண்டிய விடங்களில் புதியன கட்டிப் பிரதிஷ்டை செய்தும் வந்தார்.





மதுரை—கீழக்கோபுரம்

மதுரையிலே கோயில்கொண்டுள்ள மீனாக்ஷிசுந்தரேசரிடம் அரியநாதர் விசேஷ பக்தி யுள்ளவர். அக் கோயிலிலுள்ள மிகச் சிறப்பான ஆயிரக்கால் மண்டபமும், அறுபத்துமூவர் மண்டபமும் அவர் கட்டியன. அவையன்றி, விலையுயர்ந்த ஆபரணங்கள்பல அம்மனுக்கு உதவி, தான் கண்ட கனவொன்று நிமித்தமாகப் பள்ளியறைக் கட்டளை ஏற்படுத்தினது மன்றி, அறச்சாலை ஒன்றும், 'வன்னியடி' என்னும் நந்தவனமும் நிறுவி, சிவராத்திரித் திருவிழாவுக்கென்று பன்னீராயிரம் பொன்னளித்து, சுவாமிக்கு ஒரு வெள்ளிச் சிங்காசனமும் செய்வித்தனர்.

"அருமா தவஞ்செய் அறுபத்து மூவர் அணிமண்டபம்
மறுவாரும் சோலை அறச்சாலை மண்டபம் வன்னியடி
முருகேசன் சொகசற்கு வெள்ளிச்சிங் காதன முற்றுஞ்செய்
வருமா லரிய நயினு முதலி மதிமந்திரியே." [தான்

என்று கூறும் மதுரைத் திருப்பணிமாலை.

தனக்கு ஆத்மார்த்த மாவதன்றி, நாட்டின் வளத்தையும் சிறப்பையும் பெருக்கும் பல பணிகளை அரியநாதர் இவ்வண்ணம் செய்து வருவதைக் கண்ட கிருஷ்ணப்ப நாயகர், தானும் அவ்வாறே செய்து, தன் பெயரையும்

பாராட்டி, அவருடன் சமாதானமாகும்படித் தம் மன்னவனுக்குப் புத்திகூறியும், அவன் இணங்க வில்லை. பின்னும் அறுபதினாயிரம் படைவீரரையும் பதினாயிரம் காபிரிகளையும் அவன் திரட்டிக்கொண்டுவர, கண்டியார்க்கும் பாண்டியார்க்கும் கடும்போர் நிகழ்ந்தது. அந்தச்சண்டையிலே எண்ணாயிரம் சிங்களவரும் எண்ணாயிரம் காபிரிகளும் மாண்டனர்; கிருஷ்ணப்பநாயகரும் சின்னகேசவரும் உயிரோடு பிடிக்க எவ்வளவு முயன்றும் பயன்படாமல், தோல்வியினும் வீரசுவர்க்கத்தையே விரும்பிய கண்டிராஜனும், அக்களத்திலே பட்டு வீழ்ந்தான். அப்பால், பாண்டிநாயகருக்குத் திறை செலுத்தும் உள்நாடாகக் கண்டிராஜ்யத்தை யாண்டு வரும்படித் தன் மைத்துனர் விஜயகோபால நாயகரைப் போதிய படைகளுடன் ஈழத்திலே இருத்திவிட்டு, எஞ்சிய தண்டுகளுடன் கிருஷ்ணப்ப நாயகர் மதுரை மீண்டார்.

மேலே கூறிய போர் நிகழ்ச்சிகள் யாவும், தளவாய் அரியநாத முதலியார் அக்ஷய வருஷத்திலே (1566-67), மதுரை மீளுமுன்னரே நிகழ்ந்தனவாக, அவற்றைக் கேட்டு அவர் அகமகிழ்ந்து, தன் அருமை நண்பரின் மைந்தரை மெச்சிப் புகழ்ந்தார்; தான் ஏற்படுத்திய பாளையப் பட்டுக்கள் ஆபத்துக்காலத்தில் நாட்டுக்குத் தாரகமானதை அறிந்து பெருமகிழ் வெய்தினர்.

அப்பால் அரியநாத முதலியார்,

"சுற்றத்தால் சுற்றப் படஒழுகல், செல்வம் தான்
பெற்றத்தால் பெற்ற பயன்."

என்னும் குறளை நினைந்து, தொண்டமண்டலத்திலே, மெய்ப்பேடு, பெருநாடு முதலிய ஊர்களிலுள்ள தம் இனத்தாரைப் பாண்டிக்கு வரவழைத்து, சோழவந்தான், நகரி, திருமங்கலம், புத்தனேரி முதலிய கிராமங்களில் அவர்களைக் குடியேற்றி வைத்தார். சோழவந்தானிலே அவர்களுக்கென்றே முந்நூறு வீடுகளும், தன் குலகுருவுக்கென்று ஒரு மடமும் வீடும், ஊரைச்சுற்றி "முதலியார் கோட்டை" என்னும் கோட்டையும் கட்டி, புதிதாய்க் குடிவந்தவர்களின் சுகசௌகரியங்களுக்கு இன்றியமையாத அடிமைகள், உழவர்கள், கருமான்கள், மற்றத் தொழிலாளிகள் யாவரையும் வேண்டியவாறு குடியேற்றி வைத்தார். இவையன்றி, நாட்டிலே ஆங்காங்குள்ள பழைய கோயில்களைப் புதுப்பித்தும், வேண்டிய விடங்களில் புதியன கட்டிப் பிரதிஷ்டை செய்தும் வந்தார்.





மதுரை—கீழக்கோபுரம்

மதுரையிலே கோயில்கொண்டுள்ள மீனாக்ஷிசுந்தரேசரிடம் அரியநாதர் விசேஷ பக்தி யுள்ளவர். அக் கோயிலிலுள்ள மிகச் சிறப்பான ஆயிரக்கால் மண்டபமும், அறுபத்துமூவர் மண்டபமும் அவர் கட்டியன. அவையன்றி, விலையுயர்ந்த ஆபரணங்கள்பல அம்மனுக்கு உதவி, தான் கண்ட கனவொன்று நிமித்தமாகப் பள்ளியறைக் கட்டளை ஏற்படுத்தினது மன்றி, அறச்சாலை ஒன்றும், 'வன்னியடி' என்னும் நந்தவனமும் நிறுவி, சிவராத்திரித் திருவிழாவுக்கென்று பன்னீராயிரம் பொன்னளித்து, சுவாமிக்கு ஒரு வெள்ளிச் சிங்காசனமும் செய்வித்தனர்.

"அருமா தவஞ்செய் அறுபத்து மூவர் அணிமண்டபம்
மறுவாரும் சோலை அறச்சாலை மண்டபம் வன்னியடி
முருகேசன் சொகசுற்கு வெள்ளிச்சிங் காதன முற்றுஞ்செய்
வருமா லரிய நயினா முதலி மதிமந்திரியே." [தான்

என்று கூறும் மதுரைத் திருப்பணிமாலை.

தனக்கு ஆத்மார்த்த மாவதன்றி, நாட்டின் வளத்தையும் சிறப்பையும் பெருக்கும் பல பணிகளை அரியநாதர் இவ்வண்ணம் செய்து வருவதைக் கண்ட கிருஷ்ணப்ப நாயகர், தானும் அவ்வாறே செய்து, தன் பெயரையும்

புகழையும் நிலைநிறுவக் கருதி, திருநெல்வேலிக்குக் காவதவழித் தொலைக்குக் கீழ்பால், திருச்செந்திற் பதிக்குச் செல்லும் வழியிலே கிருஷ்ணபுரம் என்னும் நகரத்தை யெடுப்பித்து, இன்றுமே காண்பவர் வியப்பையும் மகிழ்வையும் அடையும்படியான அரிய நுண்ணிய சிற்பவினை சிறந்த கற்பணி நிறைந்தகோயிலையும் கோபுரம் குளங்களையும் அக்கிரகாரங்களையும் கட்டினதுமன்றி; திருநெல்வேலிக்கு மேற்காகக் கடையம் என்ற ஊரின் அருகே, கிருஷ்ணபுரம் என்னும் பெயரிய மற்றொரு நகரத்தையும் கட்டிமுடித்தார். இங்ஙனமாக நாயகரும் தளவாய்ப்பிரதானியும் தம்முள் இகலியிகலிப் பாண்டிமண்டலத்தை அலங்கரித்து வந்தனர்.

தன் தந்தையின் புகழொளியை மங்கவிடாது தளவாய் முதலியாரின் உதவியால் பாண்டிய நாட்டை ஆண்டு வந்த குமார கிருஷ்ணப்பர், 'பாண்டியகுல ஸ்தாபனாசாரியர்' என்றும் 'தென்கடல் நாதர்' என்றும் சாஸனங்களில் புகழப்பெற்ற வீரர், 1572-ம் ஆண்டிலே இறந்தனராக, அரியநாதர், அவர் மகன் வீரப்பநாயகரை முடிசூட்டி வைத்தார். இவர் ஆட்சியிலேயும் ஒரு சிறு கலகம் நடந்தது: மாவலி வாணாதராயன் என்னும் பாளையக்காரன், மானா மதுரையையும் காளையார்கோயிலையும் கைக்கொண்டு, நாயகர் அதிகாரத்தை எதிர்த்துக் கலகம் செய்தான். வீரப்பநாயகர் அவனை அடக்கி ஒடுக்கி, அவனுக்குரிய பாளையத்தைப் பறிமுதல் செய்துவிட்டார்.

இவர் காலத்திலே, "நாட்டை உண்மையில் ஆண்டு வந்தவர் அரியநாதரே" என்றும், அவர் கைக்கீழ் இருந்து அவர் ஆட்டுவித்தபடி யெல்லாம் இவர் ஆடிவந்தனர் என்றும், கூறப்பட்டிருக்கிறது. விசுவநாதரும் அரியநாதரும் ஒத்த துணைவராய் வந்து, பாண்டிமண்டலத்தைச் செயித்து, கிருஷ்ணதேவ மகாராயரின் உத்திரவுப்படி ஆளத் தொடங்கியவர். விசுவநாதர் இறந்தபின்பு, அவர் இருக்கும் பொழுதே முடிசூட்டப் பெற்ற குமாரகிருஷ்ணப்பர், அரியநாதரைத் தன் தந்தையின் ஸ்தானத்தில் பாவித்து, அவர் சொற்படி ஒழுகி வந்திருப்பர். அவரும் இறந்த பின்னர், அரியநாதரால் முடிபுனையப் பெற்ற வீரப்பநாயகர், எல்லா விதத்திலும் தனக்குப் பெரியோ ரானவரும், இரண்டு தலைமுறையாகத் தன் வம்மிசஸ்தாபனரா யிலங்கிய வரும், தன் சக்கரவர்த்தியான மகாராயரால், மதுரைக்கு மட்டுமன்றி விஜயநகர ஸம்ஸ்தானத்துக்கே, தளவாய்ப் பிரதானி யென்று நியமிக்கப் பட்டவருமான அரியநாத



ரின் சொற்படி ஒழுகியது, வியப்பன்றே. விசுவநாதருக்கும் குமாரகிருஷ்ணப்ப நாயகருக்கும் பின் வந்த மன்னர்கள் தன்னைத் "தளவாய்த் தாத்தா" என்றழைக்க, குருகுல ராஜ்யத்தில் பீஷ்மரைப் போலவே நாயகர்களின் பாண்டிய மண்டலாதிபத்தியத்தில் அரியநாதர் விளங்கினரென்று கூறின், வணங்காமுடி அரவக்கொடியோனைப் போன்ற அரசனொருவன் இல்லாமை நீங்கலாக, முற்றும் பொருந்தும்.

வீரப்பநாயகர் தெய்வபக்தி மிக்கவ ராதலின், தன் செல்வத்தில் பெரும்பகுதியை, தருமத்திற் செலவிட்டார். ஆயின், அவரேனும் அரியநாதரேனும், குறுகிய நோக்கமும் மதவைராக்கியமும் உள்ளவராகத் தெரிந்திலது. அதுகாறும் தூற்றுக்குடி முதலிய கடற்கரை ஊர்களிலே பரவர்களுக்குள் மதப்பிரசாரம் செய்துவந்த ஜெஸுயிட்டுப் பாதிரிமார், அவர் ஆட்சியில்தான் முதலில் மதுரையுட் புகுந்து, அந்நகரிலே ஒரு கிரிஸ்தவக் கோயிலும் மடமும் கட்டி, மேற்சாதி ஹிந்துக்களுக்குள் கிரிஸ்தவ சமயத்தைப் பரப்ப முயன்றனர். கொல்லாமை கள்ளுண்ணாமைகளை முக்கிய விரதங்களாகக் கொண்டொழுகும் உயர் மரபினர், பலவகை மிருகங்கள் பறவைகளையும் பசுவையுமே வதைத்துண்டு, பொருள் கொடுத்து மெய்யறியாமையை வாங்கி, "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதாம்" மதுக்களை அருந்தி, "சான்றோரால் எண்ணப்பட வேண்டாதாராய்" வாழ்வாரின் ஆத்மஞ்ஞான போதனைகளை இகழ்ந்து மதியாதுவிட்டது, வியப்பன்று.

"வெற்றி வேற்கை வீரராமன், கொற்கையாளி குல சேகரன்" என்று தன்னையே கூறுபவரும், 1564-ம் ஆண்டிலே தென்காசிப் பாண்டியனாக முடிசூடியவரும், நைடதம் கூர்மபுராணம் காசிகாண்டம் திருக்கருவையந்தாதி முதலிய அருந்தமிழ் நூலாசாரியரும், ஸ்ரீ வல்லவன் என்னும் இயற்பெயரினரும், விசுவநாத நாயகர் காலந்தொட்டு மதுரை நாயகர்களின் கடாக்ஷத்தை அடைந்து பெருகினோருமான அதிவீரராம பாண்டியர், வீரப்ப நாயகர் ஆட்சியில் நிகழ்ந்ததொரு போரிலே துணை நின்று பொருதனரென்று, தெரிய வருகின்றது. ஆயின், அரியநாதரும் அதிவீரராம பாண்டியரும் நெடுநாள் நண்பர்களாயிருந்திருத்தல் கூடும். அப்போதைக் கப்போது அவர்கள் சந்தித்த வமயங்களில் நிகழ்ந்த வர்த்தமானங்களும் கூற்றுக்களும் என்றுமே தெரியா தொழிந்தமைக்காக,

தமிழ் மக்கள் அனைவரும் வருந்துவ ரென்பது திண்ணம். வீரப்ப நாயகர் 1595-ம் ஆண்டிலே தேகவியோகமாக, அவர் மூத்தமகன் வீரகிருஷ்ணப்ப நாயகரை, அரியநாதர் முடிசூட்டி வைத்தார். வீரகிருஷ்ணப்ப நாயகரின் தம்பி விசுவப்ப நாயகரும் துணையரசராய் முடிசூட்டப் பெற்றன ரென்றும், அரசர் இருவருமே அரியநாதர் சொற்படி ஒழுகிவந்தன ரென்றும் கூறுவர்.



மதுரை—புதுமண்டபம்

நாயகர் வம்மிசத்தைப் பாண்டிய நாட்டிலே ஸ்தாபித்து, 1529 முதல் 1600 வரை எழுபத்தோராண்டுகளாக, முதல் நான்கு நாயகர்களின் ஆட்சிகள் முழுதும் மகுடமில் மன்னனாக ஆண்டுவந்தவரும், அரசரமைக்கும் அருந்திறல் வீரருமான தளவாய் அரியநாத முதலியார், சார்வரி வருஷம் (1600) சித்திரை மாதம் ஏழாம் தேதியன்று, தன் புக முடம்பை நிலைநிறுவிப் பொய்யுடம்பை நீத்தனர் என்ப. ஆயின் அவர் தேகவியோக மாகும்போது, அவர் வயது நூற்றுக்கு மேற்பட்டிருக்கும். அவர் ஸ்தாபித்த பாளையக்காரரே, இந்நாளிலே தென்னாட்டு ஜமீன்தார்களாக இலங்குகின்றனர். இவர்களிற் சிலர் அரியநாதரைத் தம் குலதேவதையாகக் கொண்டாடுகின்றனராம். மதுரைப் புதுமண்டபத்தில், அசுவாரூடராய்த் தோன்றும் அரியநாதரின் சிலையைக் காணலாம்.

அரியநாதரின் உதவியைக் கொண்டு, மதுரை நாயகர்



கள், நாளுக்கு நாள் செல்வத்திலும் அதிகாரத்திலும் மேம்பட்டு வந்தனராயினும்; சர்வ சுவாதீனமுள்ள இராஜர்களாகவே விளங்கினராயினும்; அவருள்ளவரை, விஜய நகரத்து நரபதி மகாராயர்களின் பிரதிநிதிகளாகவே தம்மை மதித்து, சாஸன பட்டயங்களிலும் இராஜ்யாதிகார சின்னங்களிலும் அவ்வண்ணமே ஒழுகி வந்தமை, அரியநாதரின் இராஜ பக்திக்கும் சத்திய விரதத்துக்கும் தக்க சான்றாகும். அரியநாதருக்குச் சில்லாண்டுகளுக்குப் பின், 1609-ல் பட்டத்துக்கு வந்த முத்துவீரப்ப நாயகர்தான், விஜயநகரத்து நரபதியின் மேலதிகாரத்தை முதல் முதல் மீறி, வணங்காமுடி மன்னராக ஒழுகினவ ரென்பது, சரித்திர சித்தாந்தம். ஈடெடுப் பில்லா அரசியல் திறமையோடு ராஜபக்தியும், தெய்வ பக்தியும், சத்திய விரதமும், தன் நலத்தினும் பொதுநலத்தை மேலாகக் கருதி நாடும் ஒழுக்க சீலமும் ஒருங்கமைந் திருந்ததாலன்றே, ஏழை சொல்லும் அம்பலம் ஏறி, உழுதொழிலுக்குப் பிறந்தவர் அரசர் பெருமக்களும் தொழுதகைய சீரும் சிறப்பும் திகழ்ந்து, கிருஷ்ணதேவ மகாராயர் முதல் வேங்கடராயர் இறுதியாக, விசுவநாத நாயகர் முதல் கிருஷ்ணப்ப விசுவப்ப நாயகர்கள் இறுதியாக, பல திறப்பட்ட பார்த்திபர்கள் பல தலைமுறைகளாகப் போற்றிப் புகழ்ந்து தன் சொற்படி யொழுகுமாறும், தான் பிறந்த தென்னாட்டைத் தும் பெறற்கரிய நன்மைகளைப் பெற்றுச் செழித்தோங்கித் தன் புகழ்மணமே கமழுமாறும், ஒரு நூறாண்டுகள் வாழ்ந்து, தன் பெயரை நிலை நிறுவினர்!

> "சிறப்பீனும், செல்வமும் ஈனும்; அறத்தினூஉங்
> காக்கம் எவனோ உயிர்க்கு?"

என்பது, பொய்யாமொழி.

# இராசாங்கத்தின் நோக்கங்கள்*

(233-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

[உட்ரோ உல்ஸன்]

அரசியலின் உத்தம நோக்கங்களைக் குறித்துப் பலர் பலவித அபிப்பிராயங்கள் கொள்ளக்கூடும். ஆனால் உலக சரித்திரத்தை நன்றாகப் படித்து, சரித்திர தத்துவங்களை ஆராயும் நிதான மனதுடையவர்களே இவ்விஷயத்தில்

* சிர. மா. அநந்தநாராயணன் சுருக்கி எழுதியது—229-ம் பக்கத்தைப்பார்க்க. ப-ம் ப-ர்

அபிப்பிராயம் கொடுக்கத் தகுதியுள்ளோர். இத்தன்மையோர் மிகச்சிலராதலின், கணக்கு வழக்கற்ற போராட்டங்கள், ராஜாங்க நோக்கங்களைப்பற்றி ஜனங்களுக்குள் நடந்து வருகின்றன.

இராஜாங்கத்தின் நோக்கங்கள் யாவாக இருத்தல் வேண்டும்? இதுதான் கேள்வி. சிலர் இராஜாங்கத்தை ஒரு பெருந் தீங்காகவே கருதுகிறார்கள்; ஆயினும், 'அஃது அவசியமான தீங்காகையால், இராஜாங்கம் ஜனசமூக விஷயங்களில் எவ்வளவு கொஞ்சம் தலையிடுகின்றதோ, அவ்வளவு அது போற்றத் தக்கது. பாதுகாப்பிற்கு வேண்டிய காரியங்களைச் செய்வதே இராஜாங்கத்தின் முக்கிய வேலை. மற்ற வேலைகள் எல்லாம், அநியாயமாக இராஜாங்கம் தனக்குத்தானே இட்டுக் கொண்டவையே. என்றெண்ணுவோர்கள் ஒரு சாரார். மற்றொரு சாரார், 'ஜன சமூகம், இராஜாங்கத்தின் ஆதரவினால் வளர வேண்டும்; இராஜாங்க மின்றிச் சமூக வாழ்வு நடை பெறாது; ஆகையால், ஒவ்வொருவனுடைய குடும்ப விஷயங்களும் கூட, அரசியலின் அதிகாரத்திற்கு உட்பட்டிருக்கவேண்டும்' என்று நம்புவர். இத் திறத்தார் ஆகாயக் கோட்டை கட்டுபவராவர்; ஏனெனின், ஒருநாளும் மனிதரைக் கட்டாயத்தினால் ஒரேவிதமாக நினைக்கவும் நடக்கவும் செய்ய முடியாது. ஒவ்வொருவருக்கும் தனித்தனியே யுள்ள சொந்தச்சொத்தை எல்லாருக்கும் சமமாகப் பொதுவாக்கி விடலாம் என்று எண்ணுவதும், பிரம்மசாரி எள்ளுக் கணக்குப் பார்த்தது போல்தான் முடியும். மக்களுக்குள் சிலர் அறிவு மிக்கவராயும், மற்றுஞ்சிலர் மூடராயு மிருக்க, சொத்தை மட்டும் அவ்வாறு சமமாக்கிவிட்டால், அப்படிச் சமநிலையிலேயே இருக்குமெனக் கருதுவது வீணே.

ஆகையால், இராஜாங்கத்தின் அதிகாரத்தை வரையறுப்பவர், பொதுநல நண்பராவர். அவ்வாறு செய்யாது இராசாங்கத்தை மனம்போன படியெல்லாம் ஆளவிட்டால், குடிகளுக்குத் துன்பமும் தீங்குமே விளையும். இவ்வுண்மையை அநேக சரித்திர உதாரணங்களால் விளக்கக் கூடும். பழைய காலத்து அதீனிய ரோம அரசியல்களில், மெச்சத் தகுந்த விஷயங்கள் பல விருந்தன. ஆனால், தனிச்சுதந்திரம் எவனுக்குமே இல்லை. அக்காலத்து நோக்கங்கள், அதற்கு மாறுபாடா யிருந்தன. இப்பொழுது ஐரோப்பாவில் நடைபெறும் குறிக்கோள்களை மறுத்தாலன்றி, தனிச்சுதந்திரத்தை நாம் மறுக்க முடி



யாது. ஆனால் ஒருவன் சுதந்திரத்தை வரையறுப்பதால் இராஜாங்கம் தீங்கு புரிகின்றது என்பதைக் கொண்டு, இராஜாங்கம் ஒரு விலக்கமுடியாத தீங்கே என்று கூறுதல் தவறாகும். ஜன சமூகக் கூட்டு வாழ்க்கை எவ்வளவு தீமையோ அவ்வளவே இராஜாங்கமும் தீமையாகும். இனத்தோடினம் சேர்ந்து வாழ்தல் மனிதர்க்கு இயல்பாதலின், ஜனசமூகம் உண்டாகின்றது; இக் குணம்பற்றியே மனிதன் மிருகங்களினின்றும் வேறுபடுகிறான். தனியாய் ஒரு மனிதனும் இயற்கையின் சக்திகளை வெல்ல முடியாது. நமது பலமெல்லாம் கூட்டுறவினால் உண்டாகும் பலமே. ஜனசமூகத்தின் வெளிப்படையான தோற்றமே இராஜாங்கம்; சமூகத்தின் தன்மையே இராஜாங்கத்தின் தன்மை. ஆகையால், இராஜாங்கத்தின் அதிகாரத்தையும் குடிகளின் சுதந்திரத்தையும் முரண்படாது இசைப்பதே, தேச சேவை புரிபவரின் கடமை. சொத்தைச் சமமாக்க நினைப்போர் நல்லெண்ணத்தோடு உழைப்பவர்தான். தற்காலத்திலே "தனிச்சுதந்திரம்" என்ற சாக்கைக் கொண்டு, பல தனிகர்கள், தம் நலமேபாராட்டி, ஏழைகளை வருத்துகின்றனர். இவ்வாறாகும் கொடுமை தொலைதல், மிக உசிதமே. ஆனால், அதற்கு வழி வேறு.

ஜனசமூகத்தின் நோக்கங்களே இராஜாங்கத்தின் நோக்கங்களாக இருத்தல் வேண்டும். சமூகம் என்றால் என்ன? ஒருவர்க்கொருவர் உதவி செய்யப் பலர் கூடுவது தான். எதற்கு உதவி? ஒவ்வொருவனும் தனனிஷ்டப்படி, தான் விரும்பிய தொழிலிலோ, கலையிலோ, பயிற்சி யடைவதற்கே. எந்த ராஜாங்கத்தில் குடிகள் யாவரும் பல்வேறு துறைகளில் பிரவிர்த்திக்க முடிகின்றதோ, அந்த ராஜாங்கமே மிகப் போற்றத் தக்கது. சுயேச்சையாய் மனிதன் வாழ்வதைக் கெடுக்கும் தடைகளை நீக்குவதே இராஜாங்கத்தின் தொழில். பல தனிகர் கூடி ஒரு கைத்தொழிலைத் தம் வசமாக்கிக் கொள்வதால், ஏழைகள் துயருறுகின்றனர். இப்படிப்பட்ட உரிமையை இராஜாங்கமே கையாள வேண்டும். சில வேளைகளில், பொதுஜன நன்மைக்காகும் ஒரு சேவையை (உதாரணமாக, தபால், தந்தி) இராஜாங்கமே நடத்தலாம். ஆனால், மற்றவர் அவ்வாறு செய்வதைத் தடுக்கவேண்டும்.

வியாபாரப் போட்டியிலே (Competition) செல்வர்களும் ஏழைகளும் சமநிலையில் இல்லை. சுகாதார விதிகளைக் கவனிக்குமாறும், பெண்டிரையும் குழந்தைகளையும் கைத்தொழில்களில் வேலையாட்களாய் அமர்த்தித் தீங்கு

விளைப்பதைத் தடுக்குமாறும், பேராசைகொண்டு அதிகாரிகள் பலமணிநேரம் உடல் வலி கெடும்படி கூலிகளிடம் வேலை வாங்குவதைத் தடுக்குமாறும் சட்டங்களை ஏற்படுத்துவது, இராஜாங்கத்தின் கடமையாம். தவிர, விற்கப்படும் சாமான்க ளெல்லாம் ஒரே குணமுள்ளவைகளாயும் கலப்பற்றனவாயும் இருக்கும்படி சட்டங்களை ஏற்படுத்தலும் அவசியம். இவ்வாறு இராஜாங்கம் செய்வது, அநாவசியமாக ஜனசமூக வாழ்க்கையில் தலையிடுவதாகாது. சொத்தைச் சமமாக்குவதற்கும், தனிகரின் அநியாய நடத்தையைக் கண்டிப்பதற்கும், அதிக வித்தியாசம் உண்டு. எவ்வாறு குடியானவன் புல் பூண்டுகளைக் களைந்துவிட்டுப் பயிர்களை இயற்கையாக வளரவிடுகின்றானோ, அவ்வாறே அரசியலும் ஒழுக வேண்டும்.

ஆகையால், இராஜாங்கம் அத்யாவசியமான காரியங்களிலேயே சமூகத்துடன் ஒத்துழைக்க வேண்டும். பல மனிதர்கூடி பொதுநல நன்மையைநாடிச் சேர்ந்துழைக்கும் சங்கங்கள், ஒவ்வொரு நாட்டிலும் அநேக முள. இச் சங்கங்களாலோ, வேறு மனிதர் தொகுதிகளாலோ ஆகக்கூடிய காரியம் ஒன்றையும், இராஜாங்கம் புரிதல் கூடாது. ஒருவனுடைய கெட்ட நடத்தையை இராஜாங்கம் கண்டித்தலும் தகாது. ஏனெனில், நடத்தை யென்பது தனிச் சுதந்திரத்தைச் சார்ந்தது. ஆனால், ஒருவன் திருடியோ, கொலைபுரிந்தோ, வேறு எவ்விதமேனும் தீங்குவிளைத்தோ, மற்றொருவனுடைய சுதந்திரத்தைக் குலைத்தால், இராஜாங்கம் கண்டித்தல் பொருந்தும்.

கல்வியினால் மனிதன் உயர்வடைகின்றான். ஒவ்வொருவனும் இராஜாங்கத் தொழில்களைச் சிறிய அளவிலேனும் தான் வகித்து நிறைவேற்ற முயலவேண்டும். இந்நோக்கத்திற்குக் கல்வி இன்றியமையாதது. ஆகையால் தமது மக்களுக்குக் கல்வி போதிக்கும்படி [அதாவது பள்ளிக்கு அனுப்பி, எழுதப் படிக்கவாவது கற்கச்செய்யும்படி] தாய் தந்தையரைக் கட்டாயப்படுத்துவது முறையே. இவ் விஷயத்திலும் தலையிட, அரசியலுக்குப் பாத்தியதை உண்டு.

முடிவாக: ஒன்றும் அவசரத்தில் செய்யக்கூடாது; ஒன்றையும் பழக்க வழக்கங்களுக்கு மாறாகத் திடீரென ஏற்படுத்தலாகாது; ஒரு நாட்டார், தமது நாட்டின் சரித்திரானுபவங்களைக் கொண்டே, மேல் அபிவிருத்தியை நாடி உழைக்க வேண்டும்.



கோபா:—நீ எது கேட்கிறாயோ அது தருகிறேன்.

இதைக்கேட்டவுடன், மூடி, சிறிது நேரம் யோசித்து, ஒரு துண்டுக் கடிதத்தில் ஏதோ பென்ஸிலால் எழுதிக் கோபாலையர் கையில் கொடுத்து, மிக்க ஆவலுடன் அவர் முகத்தை நோக்கினாள். கோபாலையர், அதைப்பார்த்துவிட்டு, மற்றொன்றும் பேசாது யோசனைசெய்து, முடிவில், "சரி, சம்மதம்," என்று சொல்லி, தன் பணப்பைக்குள் அந்தச் சீட்டைப் பத்திரமாய் வைத்துக்கொண்டார். உடனே, மூடி, "அது எனக்கு; என் தங்கை சங்கதி, அவள் வந்தபின், அவளைக் கேட்டாகவேண்டும்" என்று, சிறிது நாணத்தோடு சொன்னாள்.

இதைக் கேட்டவுடன் கோபாலையருக்குத் திகைப் புண்டாயிற்று. "ஆ! அப்படியா?" என்று மீண்டும் யோசிக்கலானார். பிறகு: "சரி: அது என்ன என்று, அதையும் இப்பொழுதே சொல்லிவிடு; அல்லது இது போல் எழுதிக் கொடுத்துவிடேன்" என்றார்.

மூடி:—நான் எப்படி இந்த விஷயத்தில் அவளுக்காகச் சொல்லமுடியும்? அவள் வந்துதான் ஆகவேண்டும்; அவள் மனம் எப்படியோ, உத்தேசம் ஏதோ?

கோபா:—அப்படியே ஆகட்டும்: அது என்னவாயினும் சரி, என்னால் சாத்தியமா யிருந்தால் தடையிராது. நீங்கள் மட்டும், எப்படியானாலும், நாளை இந்நேரத்துக்குள் காரியத்தை முடித்து, அநுகூலமான அவள் பதில் கடிதத்தை வாங்கி வைத்திருக்க வேண்டும். நாளை இந்நேரம் நான் வருவேன். நாளை இரவே என் மாமனார் ஊர் திரும்ப வேண்டியதா யிருக்கும்; அதற்குள் அவருக்கு முடிவான பதில் சொல்ல வேண்டும்.

மூடி:—அவள் பதில் எழுதித்தர முடியாவிட்டாலோ? வாய் மொழியாய்ப் பதில் அனுப்பினாலோ?

கோபாலையர் மீண்டும் யோசிக்கலானார்.



Page numbering incorrect.

மூடி:—எங்கள் வார்த்தை நம்பிக்கை யில்லேபா?

கோபா:—அப்படியில்லே. இருந்தாலும், அவள் கைப்பட இருந்தால்தான் என் மனதுக்குச் சமாதானமாகும். எப்படியாவது அவள் பதில் கடிதத்தை வாங்கிவர வேணும். உன் தங்கை பெங்களூரிலிருந்து திரும்பியவுடன், நீங்கள் காலேயிலே போய்ப் பார்த்து, வேண்டுமானல் மாலேயும் சென்று பார்த்தால், எப்பொழுதாவது நாலுவரி எழுதித் தரச் சவகாச மேற்படும். அப்படியே செய்யுங்கள். காலேயிலேயே காரியம் முடிந்துவிட்டால், ஆசுபத்திரியில் என்னே வந்து பார்.

மூடி:—சரி; இல்லாவிட்டால்,—சாயங்காலமானல்?

கோபா:—சாயங்காலமா? ஐந்து மணிக்குள் நான் இங்கே வராவிட்டால், ஹைகோர்ட்டுக் கெதிரே, கடற்கரைப் பக்கம் வந்து பார்.



## பத்தாவது அதிகாரம்.

மறுநாளிரவு சாப்பாடு வீட்டுவேலே எல்லாம் முடிந்து, குழந்தைகளும் தூங்கியானபின், நாராயணேயரும் பத்மாவதி யம்மாளும், தம்வீட்டு நிலாமாடத்திலே தினசரிப் பத்திரிகை படித்துக்கொண்டும், இடையிடையே சல்லாபமாய்ப் பேசிக்கொண்டும் இருக்கும் பொழுது, நாராயணேயர்: "கோபு மாமனுருக்குக் கடுங்கோபம்; அவன் மச்சினன் வெங்கிட்டுவுக்கு அதைவிட. நேற்றுச் சொன்னது போதாமல், இன்றைக்கு, இன்னும் பச்சைப் பச்சையாக வாயில் வந்தபடி யெல்லாம் சொல்லித் திட்டினன். அடிதடி வந்துவிடுமோ என்றுகூடப் பயந்தேன் நான். கோபு ஒன்றுக்கும் வாயே திறக்க வில்லே. இவனுக்கு இவ்வளவு பொறுமையும் சாந்தமும் என்றுமுதல் ஏற்பட்ட தென்று, எனக்கே ஆச்சரியமா யிருந்தது. 'குட்டி





கலியாணம் இப்பொழுது முடியாது' என்று தீர்மானமாய்ச் சொல்லிவிட்டு, அப்புறம் யார் என்ன சொன்னலும் வாயே திறவாமல், மண்சுவர் போல் இருந்து விட்டான். கடைசியிலே, 'சட்டைக்காரச்சியையும் துலுக்கச்சியையும் கண்ட கண்ட பேரை யெல்லாம் வைத்துக்கொண்டு இவன் தாறுமாறுமாய் நடப்பதினல், குட்டி இவன் வசம் இருக்கக் கூடாது; இவன் ஒரு பிராமணப் பெண்ணுக்கு ஏற்ற கார்டிய னில்லே; பெண்ணின் பாட்டனர் தான் அவளுக்குக் கார்டியனுக விருந்து, தகுந்த வரன் பார்த்து, சாஸ்திரோக்தமாய்க் கலியாணம் செய்து கொடுத்து, எல்லாம் செய்யவேண்டும்' என்று, கோர்ட்டிலே வியாச்சியம் செய்வதாகக்கூட, வெங்கிட்டு பயமுறுத்தினன். அதற்கும் வாய்திறக்க வில்லே." என்று சொன்னர்.

பத்மி:—ஆனல், அப்படி வியாச்சியம் செய்தால், அவர்கள் இஷ்டப்படி நடக்குமோ?

நாரா:—ஆ! நடக்கிற காரியமா! அவர்களால் ருஜுப்படுத்தத்தான் முடியுமா? சும்மா, மிரட்டு.

பத்மி:—சட்டைக்காரச்சியைப் பற்றித்தான் நீயும் சொன்னுய்; இன்னும் துலுக்கச்சி யாரவள்?

நாரா:—எனக்குத் தெரியாது: ஒன்றை நூருகச் சொல்வது லோகத்திலே ஸகஜந்தானே. சட்டைக்காரச்சி விஷயம் என்னவோ நிச்சயமாகத்தான் தோன்றுகிறது. இன்று சாயங்காலம் நானே நேரிலே கண்ணுரக் கண்டுவிட்டேன்.

பத்மி:—எங்கே? என்ன கண்ணுரக் கண்டாய்? என்னிடம் சொல்ல வில்லேயே.

நாரா:—கனம் பத்மாவதி யம்மாளிடத்தில், எல்லாம் நிமிஷத்துக்கு நிமிஷம், பாடம் ஒப்புவிக்க வேணுமாக்கும்.

பத்மி:—அதிருக்கட்டும்; எங்கே, என்ன நீ நேரிலே பார்த்தாய்? சொல்லு.

நாரா :—அன்டேர்ஸன் ஹாலிலே பேச்சு முடிந்து கூட்டங் கலைவிட்டு, அப்படியே கடற்கரைப் பக்கம் நானும் சங்கரையருமாய்ப் போனேம். அப்பொழுது, ஹைகோர்ட்டுக்கு எதிரே கடற்கரை யோரமுள்ள சவுக்குத் தோப்பிலே, கோபுவும் ஒரு சட்டைக்காரியும் நின்று பேசிக் கொண்டிருந்தது தென்பட்டது. கொஞ்ச நேரத்தில் பிரிந்து வெவ்வேறு வழியாய்ப் போய்விட்டார்கள். சங்கரையர் கூட : 'என்ன நாணுவையரே! உம்ம சிநேகிதருக்கு த்விதீய விவாகம் பிடியாதது மாத்திர மில்லே, நம்ம ஹிந்து ஸ்திரீகளே பிடிக்க வில்லேப் போலிருக்கே. வெள்ளைக்காரரைப்போல் அவர் ஸூட்டுப் போட்டுக் கொள்வதுபோல, வெள்ளைக்கார ஸ்திரீகள்தான் வேண்டியிருக்கும் போலிருக்கு?' என்று பரிகாசம் பண்ணினர். 'டாக்டரானபடியினலே பல பேரைத் தெரிந்திருக்கும்; சந்தித்த போது பேச நேரிடும். அதைக்கொண்டு, மூட்டை கட்டிவிடலாகாது' என்று, நான் ஒரு விதமாய்ச் சம்மாளித்து விட்டேன். நேரிலே இன்று பார்த்தாச்சு. இனிச் சந்தேக மில்லே. தீ இல்லாமல் புகைய வில்லே.

பத்மி :—ஏன், ஒரு வேளை நீ சம்மாளித்துப் பேசினதே உண்மையா யிருக்கப்படாதா? அவர் டாக்டரானதினலே, நர்ஸுகள், மருத்துவச்சிகள், வேறு டாக்டர்கள், பேஷியண்டுகள், பலபேர் சட்டைக்காரரைத் தெரிந்திருக்கும். உன்னைப் போலவே அவரும் பீச்சுக்குப்போய், அங்கே அப்படிப்பட்டவர் யாரையாவது சந்தித்துப் பேசியிருந்தால் ஆகாதா?

நாரா :—ஆஸாமி இன்னரென்று பார்க்க வேண்டாமா? கோபுவை எனக்கு இன்று நேற்ரு தெரியும்? அதுவும் தவிர, அவர்கள் சவுக்குத் தோப்பின் மத்தியிலே, வேறெருவரும் இல்லாத இடத்திலே, சமயத்திலே, நெருங்கி நின்று பேசினதும், இவன் ஏதோ [illegible]தன் பாக்கட்டி லிருந்து எடுத்து அவள் கையிலே கொடுத்ததும், அப்புறம் அவர்





கள் பிரிந்து வெவ்வேறு வழியாக விரைந்து சென்றதும், எல்லாம் பார்த்தால், என் மனசிலே சமுசயமே யில்லே. நல்ல வேளை, அவன் எங்களைப் பார்க்க வில்லே. அக்கம் பக்கம் திரும்பாமல், வேகமாய்ப் போய்விட்டான்.

பத்மி :—அப்படி யிருந்தாலும் கூட, அவரென்ன யாருக்காவது பயந்தவரா, பீச்சிலே சவுக்குத் தோப்பிலே தானு கண்டு பேசவேணும்? அவள் வீட்டுக்கு நேரே போனுல், அவரை யாராவது அடிக்கிறர்களா? அவள் தான் இவர் விட்டுக்கு வர முடியாது, சாவித்திரி யக்காள் இருக்கிறள்.

நாரா :—அதென்னவோ, அவள் யாரோ, எப்படியோ, நாமென்ன கண்டோம்? அவள் வீட்டிலே என்ன என்ன நிர்ப்பந்தங்களோ?

பத்மி :—அது போகட்டும் : அவளை நீ நன்ருய்ப் பார்த்தாயா? அழகா யிருக்காளா? சிறுப்பமா?

நாரா :—நாங்கள் கடற்கரை போய்ச் சேரும் போது, அங்கே இரண்டு சட்டைக்காரிகள் இருப்பதைக் கண்டோம். ஒரே மாதிரியாக உடுத்திக்கொண்டு, அக்காள் தங்கைகள் போலிருந்தார்கள். மூத்தவளுக்கு முப்பதிருக்கும்; இளையவளுக்கு இருபத்தைந் திருக்கலாம். இரண்டு பேருமே அவலக்ஷண மில்லே; அவ்வளவுதான் எனக்குத் தோன்றிற்று. துரைமகளா யிருந்தா லென்ன, நம்மவளா யிருந்தா லென்ன? எல்லாருமா பத்மாவதி யம்மாளைப்போல் அழகாயிருக்கிறர்கள்?

பத்மி :—அடபோடா, கேலி பண்ணதே—கூச்சங் காட்டாதே, என்னுல் தாங்க முடியாது. எனக் கென்னவோ, அத்தான்,—நான் அவரை அடிக்கடி பார்க்கிறது மில்லே, பேசுகிறது மில்லே யென்றலும், எனக்குத் தோணுகிற மட்டிலே, கோபாலண்ண இப்பொழுது முன்னைப் போல் இல்லே என்றே படுகிறது. அப்படிப் பட்ட நடத்தை

யொன்றும் இப்பொழுது இருக்கிறதாகத் தோணவில்லை. முன்னாலே சாலாவையும் கிலாவையும் வைத்துக்கொண்டு திரிந்தபோது மாதிரி வேறே, இப்பொழுது வேறே.

நாரா :—இருக்கலாம்; எனக்கென்னவோ அப்படி வித்தியாச மொன்றும் தெரிய வில்லை. ஆனால், ஒரு சங்கதி மட்டும் விளங்க வில்லை: அவன் வாஸ்தவமாய் ஒரு சட்டைக்காரியை வைத்துக்கொண்டிருந்து, அவளைக் கலியாணமும் செய்துகொள்ள இஷ்டப்பட்டால், இதை விட நல்ல சமயமேது? மாமனாரும் மச்சினனும் உடற் பிறந்தாளும் வேண்டுகிறபடி, குட்டியைக் கட்டிக்கொடுத்து விட்டால், அவர்களை யெல்லாம் திருப்தி செய்ததுமாகும்; அப்பால் தன்னிஷ்டப்படியும் செய்யலாம்; பெண்ணுக்கு வரன் கிடைக்குமோ கிடையாதோ என்கிற கவலையே யில்லை. அது வாஸ்தவமா யிருந்தால், இவன் ஏன் இப்படி ஒரே பிடிவாதமாய் மறுத்து விட்டான்? அது தான் புரிய வில்லை எனக்கு; அதனால்தான் சந்தேகம்.

பத்மி :—நீ உடைத்துக் கேட்கிறது தானே.

நாரா :—கேட்டேன், ஒரு நாள், ஜாடையாய்; ஆனால் ஒன்றும் பிடிகொடுத்துப் பதிற்சொல்ல வில்லை. நாங்கள் பேசிக்கொண் டிருக்கும்பொழுதே யாரோ வந்து விட்டார்கள். அப்புறம் நான் கேட்க வில்லை. எப்படி இதைப் பற்றிக் கேட்கிறது? எனக்கு ஸங்கோசமா யிருக்கு. இந்த விஷயத்திலும் தோழர்களா யிருந்தால், ஒரு வேளை ஸகஜமாய்ப் பேசமுடியலாம்; என்னால் இதைப் பற்றி வாய் விட்டுக் கேட்க முடிய வில்லை.

பத்மி :—அவர் தம்பி, சங்குவின்பாடு என்னவர்ச்சோ? ஏதாவது அவனைப்பற்றித் தெரியுமோ?

நாரா :—ஒன்றும் ஒருத்தருக்கும் தெரியாது. அவனுக் குள்ள சொத்தை யெல்லாம் விற்றுப் பணமாக்கிக் கொண்டு, அவனும் ஐயங்காரும் சாலாவும் பம்பாய்க்குப்





போய், ஒரு வியாழவட்டத்துக்கு மேலாகிறது. ஏதோ பாரபாரமாய், ஜெயிலுக்குப் போய்விட்டா னென்றும், துலுக்கனாகிவிட்டா னென்றும், செத்துப்போய்விட்டா னென்றும், சொல்லிக் கொள்வதைத் தவிர, நிச்சயமாய் ஒரு செய்தியும் தெரியாது.

பத்மி :—அம்மாடியோ! மகா துஷ்டன் அவன்! அவனை இப்பொழுது நினைத்தாலுமே, என் மனம் நடுங்குகிறது. மகாதுஷ்டன்!

நாரா :—இரண்டு பேருமே தூர்த்தர்கள் தான் என்றாலும், அவன் மாதிரி வேறு, இவன் மாதிரி வேறு.

பத்மி :—இவர் படித்தவரே யில்லையோ,—

நாரா :—ஆ! படிப் பென்ன செய்யும்? படித்தவர் எத்தனைபேர் சங்குவைவிட நூறு மடங்கு கேடாக நடக்க வில்லை?

"பலநல்ல கற்றக்கடைத்தும், மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது"

என்று, உலகம் தெரியாமலா நாயனார் பாடியிருக்கார்? சர்வகலாசாலையிலே இரண்டு மூன்று பட்டங்கள் பெற்று, மாதம் ஆயிரக்கணக்காய்ப் பணம் சம்பாதித்துக் கொண்டு, நாட்டுக்குப் பெரியவராய் விளங்கி, ராஜாங்க சட்டசபையிலே மெம்பர்களா யிருப்போர்கூட, சிலர், வெட்கம் மானம் ஏது மின்றி, சட்டசபைக் கூட்டத்துக்குப் பட்டணம் வரும்போதே, தங்கள் வைப்பாட்டிமார் சகிதமாய் ரயிலில் பிரயாணம் செய்துகொண்டு வருகிறார்களே, இதைவிட வேறென்ன வேண்டும்! கோபுவாவது ஓர் அற்ப மனுஷன், பெண்டாட்டியை இழந்தவன், சிறுப்பம்.

பத்மி :—

"எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்க ளெல்லாம்
ஒத்தால், பரதன் பெரிதுத்தமன் ஆதல் உண்டோ?"

என்று இராமர் சொன்னதுபோல, எல்லாருமே உன்னைப் போல் இருந்து விட்டால், அப்புறம் என் அத்தானுக்கு என்ன மகிமை?

நாரா:—ஓகோ! வைஷ்ணவாள் நமஸ்காரமோ? நான் சற்றுமுன்னாலே அம்மங்கார் அழகைப்பற்றிச் சொன்னதற்குப் பதிலோ இது? சரி, சரி; ஆனால் நீ சொல்வது மெய்தான்,—கேவலம் மெய். உலகம் அப்படித்தானிருக்கு.

பத்மி:—மணி பன்னிரண்டாகிறது. படுத்துக்கொள்ளப் போகலாமா? ஊர் வம்பளந்தது போதாதா?

நாரா:—இது ஊர் வம்பாகாது. இது மட்டும் உண்மையா யிருந்தால், எப்படியாவது அவனைத் திருத்தி, இதைத் தடுக்கவேண்டும். கோபு சட்டைக் காரச்சியைக் கலியாணம் செய்துகொண்டு விடுவா னென்று நான் பயப்பட வில்லை. அவன் கிறிஸ்தவ னானாலொழிய, ஒரு சட்டைக் காரச்சியும் அவனுக்கு வாழ்க்கைப்பட மாட்டாள். ஆனால், இப்படிக் காலம் கழிந்தால், அப்புறம் அவன் ஒரு நாளும் கலியாணம் செய்துகொள்ள மாட்டான். புருஷாயுசு பூராவும் கஷ்டப்பட வேண்டியது தான். இரண்டும் கெட்டான் வயசிலே தாரம் போய்விட்டால், அதிலேயும் சிறு குழந்தைகளும் இருந்து விட்டால், நமக்குள்ளே பெரிய தர்ம சங்கட மாய்விடுகிறது. 'பத்து அல்லது பன்னிரண்டு வயதிலே ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்' என்று, கோபுவைப் பார்த்து எப்படிச் சொல்கிறது? கலியாணி செத்ததே பால்ய விவாகத்தினால்தான் என்று, அவன் நம்புகிறான்; அவனே டாக்டர்; இன்னும் ஒரு சிறு பெண்ணை இந்த வயதிலே கட்டிக்கொண்டு, அவன் என்ன செய்வன்? கலியாண மில்லாவிட்டாலும், என்ன செய்வன்? கஷ்டம் தான்!



Page numbering incorrect.

# மதிப்புரை.

(735-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

37. திருவருட்பா—கார்த்திகைக் காசில் மதிப்பிட்ட இப் புத்தகம் (729-ம் பக்கம் பார்க்க), 15 ரூ. விலை மதிப்புள்ளதே யன்றி, விலைக்கு விற்கப்படுவ தன்று. ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் தொண்டர்களுக்கு ஸ்ரீ. N. T. முத்தையா செட்டியாரால் தகுதி நோக்கி அளிக்கப்படுவது.

38. நாகரீகம்? ஓர் இனிய தமிழ் நாவல்—[ஸ்ரீ. செ. மு. இராஜு செட்டியார் இயற்றியது-494 பக்கங்கள்-விலை ரூ 2. "ராஜன்டேல்", வால்டாக்ஸ் ரோடு-சென்னை] 1918-ம் ஆண்டில் பிரசுரமான இந்த நாவலை நமது பார்வைக்கு அனுப்பினதற்கு நமது வந்தனங்கள் உரியன. ஆசிரியரின் தமிழ் நடை நாவல்களுக் கேற்றதா யிருக்கிறது. கதைப்போக்கும், படித்தமட்டும், இன் சுவையினதாய், நற்பயன் தருவதாய்க் காண்கின்றது.

39. ஜவ ஹிருல் 'புர்: கான்— குர் ஆன்ஷரீபின் மொழி பெயர்ப்பும், அதன் விரிவான வியாக்கியானமும் கூடியது. (முதல் 2 வெளியீடுகள்-ஒவ்வொன்றும் டெமி-4vo-160 பக்கங்கள்-விலை ரூ 1-8-0; தாருன்பிர சுராலயம்-தபாற்பெட்டி நெ. 15, சென்னை). "தாருல் இஸ்லாம்" பத்திராசிரியர், ஸ்ரீ. பா. தாவுத்ஷா (பி.ஏ.) இதையியற்றி வெளியிட்டு வருகின்றனர். இஸ்லாம் மதத்தின் உண்மைகளைப் பலர் உள்ளபடி அறியுமாறு இவர் செய்துவரும் முயற்சியைப்பற்றி இதற்கு முன்னரே (பஞ்சாமிர்தம் பக்கங்கள் 466 467 602) கூறப்பட்டது.. அவை யாவற்றினும் பெரு முயற்சியாகும் இவ்வெளியீடு. மார்டின் லூதர் என்ற கிறிஸ்து மதபோதகர், Reformation என்னும் மதச் சீர்திருத்தத்தை யுண்டுபண்ணும் பொருட்டுச் செய்த யுக்தியும், நமது ராஜா ராம் மோஹன ராய், ஹிந்து மதத்தைச் சீர்திருத்தச் செய்த யுக்தியும், இதுவே. அதாவது, பொது ஜனங்களுக்குப் புரியாத புராதன பாஷையி லுள்ள வேத நூலை, எல்லோரும் பேசும் சாதாரண பாஷையில் மொழி பெயர்த்துதவுவது. 'தான் தோன்றி'க் குருக்கள்மாரும், மதாசாரியர்களும், தம்மனப் போக்குப்படி கூறுவதையே வேத வாக்காகக் கொண்டு நம்பி, அவ்வாறொழுகுவதினும், ஜனங்கள், தாமே வேதத்தைப்படித்து, தம் மதம் இப்படிப்பட்டதென் றறிந்து நடப்பது, எவ்வளவு சிரேஷ்டமாகும்! அரபு பாஷை அறியாதார், இம்மொழி பெயர்ப்பின் பொருத்தத்தையும் வியாக்கியானங்களின் சிறப்பையும் மதிப்பிடற்கு அருகரல்லர். உரையாசிரியரின் தமிழ் நடை எளியதாய் இனியதாய் இத்தகைய நூலுக் கேற்றதா யிருக்கின்ற தென்பதை மட்டுமே கூறலாகும். ஒவ்வொரு மதத்துக்கும் ஒவ்வொரு பரிபாஷை ஏற்பட்டு விடுவதுண்டு. வைணவர், கிறிஸ்தவர், மதசம்பந்தமா யெழுதும் தமிழ்,

பிரசமயப் பிறவித்தமிழர்க்குமே, சிலபோது விளங்குவதில்லை. தமிழினும் ஆங்கிலத்தை அதிகம் பயின்றுள்ளார் தமிழும், ஒருவாறு இத்தன்மைத்தாம். இதனால், மொழிபெயர்ப்புக்கள் வியாக்கியானங்களின் முதல் நோக்கம் (அதாவது, சாதாரண ஜனங்களுக்குப் பொருள் விளங்குவது) மோசம்போய்விடுகிறது. ஸ்ரீமான் தாவுத்ஷாவின் வியாக்கியானத் தமிழ் அப்படியில்லை யென்பது நிச்சயம். மூல ஸூராக்களின் மொழி பெயர்ப்பைப்பற்றி இத்துணை யுறுதி கூற முடிய வில்லை. உதாரணமாக:— இரண்டாவது அத்தியாயத்தில் 59-வது ஸூராவின் மொழிபெயர்ப்பில், "ஆதலின் அநியாயம் செய்து கொண்டிருந்தவர்கள் மீது ஆகாயத்திலிருந்து ஒரு வேதனையை நாம் இறக்கினோம்" என்றெழுதியிருப்பது, விவிலியவேத மொழிபெயர்ப்பை நினைப்பூட்டுகின்றது. உரையாசிரியர் இவ்வாறெழுதியதன் காரணங்கள், மூலம் வேதவாக்காதலின், மொழிபெயர்ப்பு அதைவிட்டு ஒரிம்மியும் விலகலாகாதென்ற கொள்கையும், அரபு பாஷையின் இயலும் தமிழியலும் வேறு படுவதுமே, என்னலாம். இதையோர் குறையாகக் கூறிலேன். இப்படிப்பட்ட இடங்களிலும், கூடியவரை தமிழியலுக்குப் பொருந்த மொழி பெயர்ப்பதே நலம் என்னும் அபிப்பிராயத்தைக் குறித்தற் பொருட்டே, இதை எடுத்துக்காட்ட வேண்டியதாயிற்று. இவ்விஷயத்தில் அபிப்பிராயபேத முண்டு. நல்ல காகிதத்தில் அழகுறத் தெளிவாய் அச்சிட்டிருப்பதோடு, ஆசிரியர், மூலத்தையும் வியாக்கியானங்களையும் நன்கு விளக்குமாறு எடுத்துக் கொண்டிருக்கும் சிரமம், மிகப்பெரிதாம். இவ்வரும் பெருநூல் இனிது நிறைவேறித் தமிழ் மொழிக்கோர் பூஷணமாயும் தமிழ் மக்களுக்குப் பேருபகாரமாயும் இலங்குவதாகுக.

40. தமிழ் வாசகம்—(பால சிக்ஷை முதற் பாகம்—ஸ்ரீ. S. எஜ்ஞஸ்வாமி எழுதியது-வி. எஸ். வேங்கடராமன் & கம்பெனி, கும்பகோணம்-விலை 2 அணா) இது பல படங்களுடன் கூடிய அழகிய புஸ்தகம்-சிறுவர்க்கேற்றது. —மா.







# இலங்கையும் இலங்கையரும்

(663-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

Rev. F. கிங்ஸ்பெரி, B. A., சென்னை.

## இலங்கை அரசு



இலங்கைச் சட்ட நிருபண சபை— அங்கிலேய (Colonies) குடியேற்றங்களில் இலங்கையும் ஒன்று. இக்குடியேற்றங்கள் இருவகைப்படும். 1. சுவராஜ்யக் குடியேற்றங்கள் (Self-governing colonies) 2. முடியாளும் குடியேற்றங்கள் (Crown colonies). இவற்றுள் இரண்டாம் வகுப்பினது இலங்கை. இலங்கை முழுவதும் அங்கிலேயர் வசம் வந்தது கி.பி. 1815ஆ. காப்பித்தோட்டம், தேயிலைத் தோட்டம், இறப்பர் (Rubber) தோட்டங்கள் பெரும்பாலும் அங்கிலேயர் கையிலுள்ளன. ஆயினும் இலங்கையிலுள்ள ஐரோப்பியர் தொகை, 8,421. (பறங்கிகள் தொகை வேறு). இங்கிலாந்தில் குடியேற்றங்களின் காரியதரிசி (Secretary of State for Colonies) க்கும், இலங்கையில், தேசாதிபதி (Governor) க்கும் கீழ் ஆளப்பட்டு வருகிறது. இந்தியாவிற் போலவே இலங்கையிலும் சட்ட நிருபண சபைச் சீர்திருத்தம் பெற்று, இவ்வருஷம் முதல் புதுச் சபை தோன்றியுள்ளது. இச்சபையின் அங்கங்கள் 48 பேர். இவர்களுள் 14 பேர் உத்தியோகஸ்தர், 34 பேர் ஜனங்களால் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள். 34 பேரில், 24 பேர், 9 மாகாணங்களுக்குப் பிரதிநிதிகள். ஐரோப்பியர், சிங்களவர், இலங்கைத் தமிழர், முகம்மதியர், பறங்கிகள், இந்திய தமிழர் என்ற வித்தியாசம் சிறிதுமின்றி, இவ்விருபத்து நாலு பேரும், ஒன்பது மாகாணங்களுக்கும் தெரிந்து கொள்ளப்படுவர். வெள்ளைத்தோல்,

கறுப்புத்தோல், மஞ்சள் தோல் என்ற வித்தியாசம் இங்கே யில்லை. ஆங்கிலம், சிங்களம், தமிழ் என்ற பாஷை வித்தியாசமு மில்லை. பௌத்தம், சைவம் கிறைஸ்தவம், இஸ்லாம் என்ற மத வித்தியாசமு மில்லை. ஒவ்வொரு மாகாணத்துக்கு இத்தனை பேர் என்பதே கணக்கு. யாரும் யாருக்காவது வோட் கொடுக்கலாம். இப்படியே இந்த 24 பேரும் தெரிந்து கொள்ளப்படுவர்.

மொத்தம் 48 பேர் என்றும், அவர்களுள் 14 பேர் உத்தியோகஸ்தர் என்றும், 24 பேர், 9 மாகாணங்களுக்காகவும் தெரிந்து கொள்ளப்படும் பிரதிநிதிகள் என்றும் சொல்லப்படவே, மிச்சமாயுள்ள பதின்மரும் சமூகம் சமூகமாகத் தெரிந்து கொள்ளப்படுவர்.

இப்பதின்மருள், மூவர் முகம்மதியர்; இருவர் பறங்கிகள்; இருவர் இந்தியர்; இருவர் ஐரோப்பியர்; ஒருவர், மேல் மாகாணத்தில் வசிக்கும் யாழ்ப்பாணத்துத் தமிழர்.

பெரும்பான்மையார் சிறு பான்மையாரைக் கவனியாது போவது கூடிய காரியமாகையால், அதனுற் சிறு பான்மையோர் நன்மையை விரும்பி, இப்பதின்மரும், தங்கள் தங்கள் கூட்டத்தாராலேயே தெரிந்து கொள்ளப்படுவர். இவர்களுள் முதல் ஒன்பதின்மரைப் பற்றி நான் ஒன்றுங் கூறேன். கடைசியிற் கூறப்பட்ட, மேல் மாகாணத்தில் வசிக்கும் யாழ்ப்பாணத்தாருக்காக ஒரு பிரதிநிதி வேண்டுமோ என்பது கேள்வி. வட மாகாணத்துப் பிரதிநிதிகள் எல்லாரும் யாழ்ப்பாணத்துத் தமிழராயிருப்பர் என்று நினைக்கத்தகும். கீழ் மாகாணத்துப் பிரதிநிதிகளும் தமிழரேயாவர். இவர்களை யாழ்ப்பாணத்துத் தமிழர் எனின் தவறுகாது. உத்தியோகஸ்தர் பதினுல்வருள், இரண்டொருவர் யாழ்ப்பாணத்தாராயிருப்பர். இப்படியிருக்க, இத்தொகை போதாதென்றே, மேல் மாகாணத்தில் வசிக்கும் யாழ்ப்பாணத்தாருக்குள்ளும் பிரதிநிதி ஒருவரை நியமிப்பது? இஃது இந்தியரிடம் படித்துக்கொண்ட ஒரு பாடம் போலும்! இங்கே, இந்தியாவிலோ, இந்திய கிறிஸ்தவர்கள் தங்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதிகள் வேண்டுமென்று மாரடித்ததால், அரசாங்கத்தாரும் அவர்கள் புலம்பலைக்கேட்டு மனதுருகி, அவர்களுக்கென்று பல பிரதிநிதிகளைத் தெரிந்து கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறுர்கள். ஹிந்துக்களுள்ளும் பிராமணரல்லார் தங்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதிகள் குறைந்த பக்ஷம் இத்தனை பேர் இருக்க வேண்டு



மென்று அழுது, அப்படியே பெற்றுக் கொண்டார்கள். இவ்வாறு, ஒவ்வொரு சமூகமும், தனக்குத் தனக்கு என்று தன் காரியம் பார்க்கும் வரையிலும் இந்தியர் பிரிந்தேயிருப்பர். இந்தியர் பிரிந்திருப்பதே, ஐரோப்பியரில் சிலர் விருப்பம். ஏன்? நெய்க்குடம் உடைந்தால் நாய்க்கு வேட்டையல்லவா? ஓ ஹிந்துக்களே, முகம்மதியர் உங்களை நம்பாததற்குக் காரணமென்ன? குற்றம் முழுதும் அவர்கள் மேலேயே என்று சொல்லலாமா? ஓ பிராமணர்களே, பிராமணரல்லார் உங்களை நம்பாததற்குக் காரணமென்ன? வீண் வயிற்றெரிச்சல் தானு? அல்லது உங்கள் மேலும் குற்றமுண்டா? மாகாணச் சட்ட நிருபண சபைகளுக்கும் இந்தியச் சட்ட நிருபண சங்கத்துக்கும், நகரபரிபாலன சங்கங்களுக்கும், ஜில்லா சங்கங்களுக்கும், தாலூகா சங்கங்களுக்கும், கிராம ஐக்கிய சபைகளுக்கும் பிரதிநிதிகள் தெரியும்போது, பிராமணர் பிராமணரல்லார் என்ற வித்தியாசம், ஹிந்துக்கள் முகம்மதியர், கிறைஸ்தவர் என்ற வித்தியாசம், ஒன்றும் கவனியாது, தக்கவர் எவரோ, அவருக்கே வோட் கொடுக்கும் நாள் வருவது என்றே!



# ம ர ண ம்



(வெருலாம் பிரபு பிரான்ஸிஸ் பேகன் என்பவர் இங்கிலீஷில் எழுதியது)

ஸ்ரீ. வே. நாராயணையர், M. A., M. L., மொழிபெயர்த்தது.

குழந்தைகள் இருளிற் செல்லப் பயப்படுதல் போன்றது, மனிதர் மரணத்திற்குப் பயப்படுவது. குழந்தைகளுக்கு இயற்கையிலே இருளைக் கண்டா லுண்டாகும் பீதி கட்டுக் கதைகளால் அதிகரிக்கப்படுவது போலவே, மனிதருக்குள்ள மரணபயமும் கதைகளால் அதிகரிக்கப் படுகின்றது.

உண்மையிலே, மரணத்தைப் பாபத்தின் பலனுகவும் வேறுலகிற்குச் செல்லும் மார்க்கமாகவும் சிந்திப்பதே சிலாக்கியமான வைதிக சிந்தனையாகும். அப்படி யிருக்க, மரணத்தை இயற்கைக்குச் செலுத்த வேண்டியதோர் கப்பமாகக் கருதி நடுங்குவது பேதைமையாகும். ஆயினும் மதப்பற்றுள்ளாரின் சிந்தனை மொழிகளிற் சிற்சில, அஹம்பாவமும், மூடநம்பிக்கையும் கலந்து

தோன்றுகின்றன. விரலின் நுனி சற்று சிதைக்கப்பட்டாலும் நசுக்கப் பட்டாலுமே எவ்வளவு வலி உண்டாகின்றது; இதினின் றும் மரணகாலத்தில், தேகம் முழுவதும் சிதைவுற்று நாசமடை யும்போது என்ன அவஸ்தைப்பட வேண்டுமென்று ஊகிக்கலாகும் என்று, பண்டாரங்களின் தவமுறைப் புஸ்தகங்களிலே சில கட் டுரைகள் காணப்படுகின்றன. ஆயினும், பல வேளைகளில் ஒரு சிறு அவயவத்தில் ஏற்படும் வலியினும் இலகுவாகவே மரணம் ஏற்படுகின்றது; ஜீவாதாரமான தேக உறுப்புக்கள் மற்றைய அவயவங்களினும் அதிகம் கூரிய உணர்ச்சியுள்ளவை யல்ல. தன்னை (தெய்விக ஆவேச மில்லாத) ஒரு சாதாரண மனிதனாகவே கொண்ட தத்துவ ஞானியொருவன் பின் வருமாறு நன்குரைத் தனன்:—"மரணத்தினும் அதின் கூட வரும் ஆடம்பரங்களே அதிகம் பயம் கொடுப்பன. துக்கத்தால் பெருமூச்செறிவோரும் மூர்ச்சிப்பவருமாய் அழுது நிற்கும் அன்பரும், மரித்தவரின் வெளுத்த முகமும், கறுத்த ஆடைகளும் சரம சடங்குகளும் மற்று மாகச் சேர்ந்து, மரணத்தைப் பயங்கரமாகக் காட்டுகின்றன."

மனிதன் மனத்தெழும் பல பல மற்ற அல்ப ஆசைப்பற்று கள் கூட மரணபயத்தை எதிர்த்துத் தோற்கடித்து விடுகின்றன வென்பது, நன்கு கவனிக்கத் தக்கது. மரணத்தை வெல்லக் கூடிய பல ஆசைப் பற்றுகள் இருக்க, அதை யொரு பயங்கரமான பகை யாகக் கருதுவது தகாது; உதாரணமாக, பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்ற அவா, மரண பயத்தை மீறிச் செல்கின்றது; காதல், மரணத்தை ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை; பெருந் தன்மை, எதிர் சென்று அடைகின்றது. துக்கம், எதிர் நோக்கி, அதை வரவேற்கின்றது; பயம், அதன் பதவியை முன் சென்று அடைகின்றது. இம்மட்டோ! ஓட்டோ சக்கிரவர்த்தி (யுத்தத்தில் தோற்றதனால்) தற்கொலை புரிந்து கொண்டவுடன், அநுதாபத்தால் பலர் தாமும் தற்கொலை செய்து கொண்டனர். (பல உணர்ச்சிகளி லும் அநுதாபம் மேம்பட்டது) அதிபதியினிடத்துள்ள அநுதாபத் தாலும், அவனை உண்மையில் பின்பற்றுவோராதலாலும், அவர் அவ்வாறு மரித்தனர்; இவ்வளவோடு நிறுத்தாமல், ஸெநீகா என் பவர், அதிநுட்ப வுணர்ச்சியையும், அதிமிகுதியையும் இந்த ஜாபிதா வில் சேர்க்கின்றனர். ஒருவன், அதிபராக்கிரமசாலி யல்லனாயி னும், அதிகம் கஷ்டப்படுபவ னல்லனாயினும், திரும்பத் திரும்பச் செய்தவற்றையே செய்து அலுத்துப்போய் உயிர் நீத்தலும் கூடும்.

நன்கு கவனிக்கத் தகுந்த விஷயம் இன்னொன்று உண்டு: மரணம் வருங்கால மனோல்லாஸம் சற்றேனும் மாறுதலடைவ தில்லை என்பது. அநேகர் கடைசி நிமிஷமட்டும் தம் சுபாவம்



மாறாத வண்ணமே தோற்றுகின்றனர்; அகஸ்டஸ்கேய்ஸர் என் பவர் சாகும்போதும் உற்சாகத்துடன், "லிவியா, உன் உயிருள்ள வரை நம்முடைய இல்லற வாழ்க்கை நாட்களை மறவாமல் நினைந் திருப்பாய்" என்றனர்; டைபீரியஸ்ஸின் சூதுமே மாறவில்லை: டாஸிடஸ் அவரைப்பற்றிச் சொல்லும்போது, "டைபீரியஸ்ஸின் தேக வலிவு குன்றிய மரண காலத்திலும், அவர் சூது அவரை விடவில்லை" என்று கூறியுள்ளார். வேஸ்பாஸியன், ஒரு பலகை மீது உட்கார்ந்து கொண்டு, பரிகாசமாய்: "நான் ஒரு தேவனாக மாறுகின்றேன் என்று நினைக்கிறேன்" என்று கூறி முடிந்தனர். கால்பா என்பவர் தன் கழுத்தைக் கொலையாளியின் கோடரிக்கு முன் நீட்டிக் கொண்டே, இவ்வாறு பேசினர்: "இது உரோமா புரத்தவர்க்கு நன்மை பயக்குமாயின், வெட்டு" என்று. ஏழாவது ஸெவிரஸ் என்பவர், "நான் செய்ய வேண்டிய காரியம் ஏதேனும் பாக்கியிருந்தால் விரைந்துவா" என்று கூவிய அவசரத்தோடே, உயிர் துறந்தனர். இப்படியே மற்றும் பலர்.

வாஸ்தவத்திலே, ஸ்டோயிக்ஸ் மதத்தார், மரணத்தை அதி கம் பாராட்டி அதற்குப் பெரு மதிப்புக் கொடுத்துவிட்டனர். மர ணத்திற்குச் சித்தமாக வேண்டி அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள், மரணத்தை அதிக பயங்கரமாகத் தோற்றச் செய்தன. இயற்கை நமக்கு அளிக்கும் நன்கொடையாக உயிரின் இறுதி யைக் கருதி, அவ்வாறு உரை செய்தவன், நன்குரைத்தனன்.

பிறப்பதுபோல மரிப்பதும் இயற்கையே யாகும் (ஒரு வேளை சிறு குழந்தைக்கு, அது போன்று இதுவும் வருத்தம் தரக்கூடும்). தீவிர நோக்கத்துடன் ஒன்றையேபற்றிச் செல்வோன் கோபச் சண்டையில் அடிபட்டவன் போல்வான்; அவனுக்கு அச்சமயம் நோவொன்றுமே தோன்றாது; ஆகவே, நல்லதோர் காரியத்தில் மனதைத் திருப்பி இருத்திவைப்பவனுக்கு, மரணத்தின் அவஸ் தை தோன்றாமல் விலகிவிடும்.

மேற்சொன்னவற்றினும், மேலானதான இறுதிச்சொல் ஒன்றுளது—தான் எதிர்பார்த்த உயர்பதவியை அடைந்த ஒரு வன், "இனி உன் அடிமைக்கு போக விடைகொடாய்" என்று பிரார்த்திப்பதே.

மரணத்திற்கு இன்னொரு பெருமையும் உண்டு: அதாவது, நற்புகழ்ச்சிக்கு வழிதிறந்து, பொறாமை என்னும் அனலை அவிக் கின்றது, என்பது; உயிருடன் இருக்கும்போது பொறாமைக்குப் பாத்திரனாயிருந்தவன், இறந்ததும் பலராலும் காதலிக்கப்படுகின் றான் அன்றோ.

# மதுவிலக்கு

கார்த்திகைக் காசில் (672-ம் பக்கம்), மதுவிலக்கினுல் உண்டாகும் ஐந்து ஆறுகோடி ரூபாய் வருஷ வருமான நஷ்டத்துக்கு ஈடாகும்படி, வேறு தக்க உபாயங்கள் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. இந்த விஷயத்தில்,சென்னை ராஜதானி சம்பந்தப்பட்ட வரையில், என்ன என்ன ஏற்பாடுகள் செய்யலாமென்று, ஆப்காரியிலாகா மந்திரிக்குச் சென்னை மதுவிலக்குச் சங்கத்தார் கூறியுள்ள யோசனைகளின் சாராம்சம், கீழே சுருக்கிக் கூறப்படும்:—கடைசி வரையில், பணம் குடிகளிடமிருந்து வரி மூலமாய்த்தான் வரவேண்டும். ஆகையால், என்ன என்ன வரிகளை உயர்த்தினுல், அல்லது புதிதாக நியமித்தால், ஏழைகள் கஷ்டப்படாமல், வரிகொடுக்க வல்ல செல்வர்களிட மிருந்தே பணத்தை வசூலிக்கலா மென்று பார்த்துத் தீர்மானிக்க வேண்டும். அவை யாவன.—

(1) வருமான வரி—ஆண்டுக்கு ரூ.2000க்கு மேல் வரும்படியுள்ளவர்களிடமிருந்து மட்டும், வருமானம் உயர உயர வரி விகிதமும் உயரும்படி ஏற்படுத்தி, இப்பொழுதுள்ள வருமான வரிக்கு மேல் வரி யொன்று வசூலிப்பது.

(2) நில வரி—இப்பொழுது இது பளுவாயிருக்கிறதாயினும், செட்டில் மெண்டு காலங்களில் அதிகரிக்கப்படாமல், ஒரே நிலையாய் நெடுங்காலமா யிருந்துவரும் ஜமீன் தாரிகளில, அவ்வளவு அதிக மில்லை. அப்படிப்பட்ட ஜமீன்தார்கள் பூஸ்வான்களிடமிருந்து, இப்பொழு துளள நில வரிக்கு மேல்வரி யொன்று வசூலிப்பது.

(3) வாரிஸ் வரி-சொத்து விபாக வரி—ஒரு சுவான் இறந்து அவர் சந்ததியார் சொத்தைப் பெற்றுப் பட்டாமாறும் போதும், சொத்துக்களை வாரிசுகள் பாகஞ் செய்துகொள்ளும் போதும், சொத்தின் விலை மதிப்புக்கு ஏற்றபடி புதிய வரி யொன்று வசூலிப்பது.

(4) தேயிலை-க்காபிக்கொட்டை-மேல்வரி—சென்னை ராஜதானியிலே 91,900 ஏக்கர் பூமியில் தேயிலை பயிராகிறது. 1922–23-ம் வருஷத்தில் ரூ 202½ லக்ஷம் விலைமதிப்புள்ள 30,386,551 பவுண்டு தேயிலை இந்த ராஜதானியி லிருந்து ஏற்று





மதியாயிற்று. இந்தியா கவெர்ன்மெண்டார் வசூலிக்கும் 100 பவுண்டுக்கு ரூ1-8-0 வரியைத் தவிர, வேறு வரி யில்லை. காப்பிக் கொட்டையும், அதே ஆண்டில், ரூ 119½ லக்ஷம் விலை மதிப்புள்ள 162,045: அந்தர் கொட்டை ஏற்றுமதி யாயிற்று. இவ்விரண்டு பண்டங்களின் வியாபாரிகளும் கனத்த லாபத்தை அடைந்து வருகின்றனர். இப்பொழுதுள்ள சொற்ப வரியின் மேல்வரி யொன்று வசூலித்தால், மாகாண கவர்ன்மெண்டாருக்கு ஏரான மான வரும்படி ஏற்படும்.

(5) புகையிலை வரி—1922-23-ம் ஆண்டில் சென்னை மாகாணத்திலிருந்து, ரூ 19¾ லக்ஷம் விலை மதிப்புள்ள 41,434,517 பவுண்டு புகையிலை ஏற்றுமதி யாயிற்று. இதன் மீது ஒரு சிறு புதிய வரி வசூலிக்கலாம்.

(6) நிலக் கடலை (வேர்க்கடலை—மணியிலாக் கொட்டை) நிலக் கடலையும், அதன் எண்ணெயும், பிண்ணுக்கும் ஏற்றுமதியாவதால், நாட்டுக்கு அதிக நஷ்ட முண்டாகிறது. 1922-23-ம் ஆண்டிலே, ரூ 635½ லக்ஷம் விலைமதிப்புள்ள 224,629 டன் கொட்டையும், 30,710 டன் பிண்ணுக்கும் நம்ம ராஜதானியிலிருந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தலி நிதர்லாண்டு தேசங்களுக்கு ஏற்றுமதியாயின. இவற்றின் மீது புதிய ஏற்றுமதி வரி ஏற்படுத்தினுல், சர்க்காருக்குப் பணம் வருவதோடு, நாட்டுக்குச் சேதமாக இப்பொருள்கள் வெளிச் செல்வது மட்டுப்படும்.

(7) மற்றப் பொருள்கள்—பருத்தி, ஆடுமாடுகளின் தோல்கள், இவை, இந்நாட்டிலேயே தொழில் செய்யப்படாமல், பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாவது குறையும்படி, ஏற்றுமதிவரி யேற்படுத்தினுல், நாடும் க்ஷேமமுறும், அதிக வருமானமுமுண்டு.

மேலே கூறிய வரிகளைக்கொண்டு சென்னை மாகாணத்தில் மதுவிலக்கினுல் நேரலாகும் வருமானக் குறையை, நிரப்பிக் கொள்ளலாம்.



(53) குறள் நானூறு—இந்த ஜனுவரி (1925) மாதத்தில் இந்நூல் வெளிவந்து விட்டது.

3 வித பைண்டிங்கி லுள்ளது. விலை அணு 4, 6, 8.




(781-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

## (116) I. மதவிஷயக் குறிப்புக்கள்.

இஸ்லாம் என்னும் முகம்மதிய மதத்தின் முக்கியக் கொள்கைகள் பின்வருவனவாம்:—

"இம் மார்க்கம் முக்கியமாக ஏக தெய்வக் கொள்கையையும், ஏக சகோதரத்துவத் தன்மையையுமே அதிகமாக எல்லா மனிதர்களுக்கும் எடுத்தோதுகின்றது. எவ்வகைத் துர்க்குணமு மின்றி எல்லா நற்குணங்களும் ஒருங்கே அமையப்பெற்ற ஏக நாயகனாகிய இணையற்ற அல்லாஹு 'தஆ'லாவையே, தோட்டி முதல் தொண்டைமான் வரை சகல ஜனங்களும் பூஜித்தல் வேண்டுமென்கின்றது. இம் மார்க்கத்தின் கொள்கைப்படி இறைவன் இவ்வுலகில் யாதொரு விதமாகவும் அவதரிப்பதில்லை. இவனுக்கு ஒப்பானவரேனும் மிக்கானவரேனும் இப் பிரபஞ்சத்தில் ஒருவருமில்லை. இவனே சர்வ லோகங்களுக்கும் ஸாக்ஷாத் பரம பிதாவா யிருக்கிறான். எல்லா உலகங்களிலு முள்ள எல்லாப் பொருள்களும் இவ் வல்லாஹு 'தஆ'லாவின் சிருஷ்டியாகவும்,இவனுடைய அடிமைகளாகவுமே, இருந்து வருகின்றன. இப்படிப்பட்ட இணையற்ற ஆண்டவன், இகம் பரம் என்னும் இருலோகத்துக்கும் எஜமானாகவும், சர்வ வியாபியாகவும், சர்வசக்தி வாய்ந்தவனாகவும், சர்வ ஞானம் நிறைந்தவனாகவும், சரியான நீதிபதியாகவும், சர்வலோக ரக்ஷகனாகவும், சர்வலோக சரண்யனாகவும், சுவனத்திலும் புவனத்திலும் உள்ள சகல சராசரங்களுக்கும் சர்வாதிகாரியாகவும், சுயமே அமைந் திருக்கிறான். இப்படிப்பட்ட ஆதியந்த மில்லாத அல்லாஹு 'தஆ'லா வானவன் அருள் நிறைந்தவ னாகவும் அன்பு மலிந்தவ னாகவும் காணப்படுகிறான்; இவனே இவ்வண்டகோளத்தி லுள்ள சராசர சிருஷ்டிகளுக் கெல்லாம் இணையற்ற





நண்பனும் ஏக பராபர நித்தியனும் தோன்றி யிருக்கிறான்; எல்லோருக்கும் நல் வழி காட்டியாயும், நம் மனோவர்க்கும் கருணைமிக்க நியாயாதிபதியாயும், இவன் காணப்படுகிறான். ஆதலின் இவனைப் போன்றவனைப் போன்ற தெதுவும் இவ்வண்டத்தில் இல்லவே யில்லை. இவன் ஆணு மல்ல; பெண்ணு மல்ல; ஆனால் அலியு மில்லை. இவனுக்கு மனைவியாவது மக்களாவது ஒருவரு மில்லை. இவனுக்குச் சுகதுக்க மென்பது கிஞ்சித்தும் கிடையாது. அயர்ச்சியேனும் அரை யுறக்கமேனும் இவனைச் சாடுவதில்லை. இவன் பகுக்க முடியாத ஏகாண்டமான அரூபியா யிருக்கிறான்; இவனிடத்தி லிருந்தே எல்லாம் தோற்றமா யிருக்கின்றன. பிறகு இவனிடமே எல்லாம் சென்று ஒடுங்குகின்றன. வானங்களுக்கும் பூமிக்கும் இவனே ஒருதீபமா யிருக்கிறான். இவன் பரிசுத்தமானவன், புகழுக் குரியவன், கம்பீரம் நிறைந்தவன், எவருடைய மனோவாக்குக் காயங்களுக்கும் எட்டாத மிகப் பெரியவன், ஆதியந்த மில்லாத அரூபியானவன், ஆதியும் அந்தமும் தானுயிருப்பவன்.

இம் மார்க்கத்தின் பிரகாரம் எல்லா மனிதகோடிகளும் ஏக சகோதர கோஷ்டியைச் சேர்ந்தவர்களாகவே கருதப்படுகிறார்கள். மேன் மக்க ளென்றும் கீழ்மக்க ளென்றும், அரச னென்றும் அடிமை யென்றும், தனவந்த னென்றும் தரித்திரவா னென்றும், உயர்ந்த ஜாதி யென்றும் தாழ்ந்த ஜாதி யென்றும், ஒருவிதமான வேறுபாடும் கொண்டாடப் படுவதில்லை. மனித கோடிகளுக்கு இன்றியமையாத ஜனநாயகத்துவத்துக் குரிய குடியரசுக் கொள்கையையே இம்மார்க்கம் தனக்கு அடிப்பீடமாகக் கொண்டிருக்கிறது. இன்னும் இம் மார்க்கத்தில் புரோகிதர்க ளென்னும் ஒரு தனிப்பட்ட ஜாதியார் ஒதுக்கிவைக்கப்பட் டில்லை. மதவிஷயத்தில் ஞான மடைந்திருக்கும் எவரும், எப்படிப்பட்ட லௌகிக வைதிக காரியங்களையும் செய்ய, அருகதையுள்ளவராக ஆகின்றார். இன்னும் இம்மார்க்கத்தில் எல்லா மனிதர்களும் ஆண்டவனுடைய சம சிருஷ்டி யென்றே கருதப் படுவதால், இதில் "தீண்டாமை" யென்னும் ஒரு கொடிய வழக்கம் அடியோடு விலக்கப்பட்டிருக்கிறது. மனிதர்கள் எத்தொழிலைச் செய்துவந்த போதிலும், எப்படிப்பட்ட அந்தஸ்தி லிருந்துவந்தபோ திலும்,இம்மார்க்கத்தில் குலப் பெருமை யென்பதும் ஜாதி யிறுமாப் பென்பதும், ஒரு சிறிதும் பாராட்டப்படுவ தில்லை. சர்வலோக நாதனின் முன், சகல மனிதர்களும் ஒரே ஜாதியாகத்தான் கருதப்படுகிறார்கள்.

என்று இம் மதம் உபதேசம் புரிகின்றது. அவரவருடைய நன்மை தீமைக்குத் தக்கவாறு ஆண்டவனுடைய சன்மானமும் சிக்ஷையும் கிடைக்கு மல்லாமல், ஒருவருடைய பிறப்பினாலும் தொழிலினாலும் யாதொருவிதமான மேன்மை தாழ்மைகளும் உண்டாய்விடுவ தில்லை. இன்னும் இம் மார்க்கத்தில் பெண்களுக்கும் ஆடவரை யொத்த சமசுதந்தரங்க ளுண்டு; அவரவருடைய லௌகிக வைதிக காரியங்களின் நன்மை தீமைகளுக்கு அவரவரே ஜவாப்தாரி யென்னும் இம் மூலக் கொள்கையானது, ஆடவரைப் போல் பெண்டிருக்கும் உண்டு. ஒருவருடைய சுமையை மற்றொருவர் சுமக்க முடியா தென்று, இம் மார்க்கத்துக்குரிய வேதம் முறையிடுகின்றது. ஆதலின் ஒருவருடைய பாபத்துக்காக வேறொருவர் பிராயச்சித்த மென்னும் பரிகாரம் செய்துவிடலா மென்பது ஒருபோதும் முடியாது; அவரவரும் தத்தம் ஈடேற்றத்துக்குத் தாமே வழிதேடிக்கொள்ளுதல் வேண்டும். ஆனால் எப்பொழுதேனும் தவறிய வழியில் தெரியாம லிறங்கிப் பாபத்தைச் செய்து விடுவோ மாயின், அதற்கு நாம் சுயமே பரிகாரம் தேடிக்கொள்ளல் வேண்டும். ஆண்டவனுக்கும் அடியார்களுக்குமிடையில், பாதிரிமார்களேனும் புரோகிதர்களேனும் வந்து விபாரிஷ் செய்யத் தேவை யில்லை. ஏனெனின், ஆண்டவனே ஒவ்வொருவருடைய கூப்பாட்டையும் கேட்டு, அவரவருக்குரிய மன்னிப்பைத் தன்னிஷ்டம்போல் அருளுகிறான்.'' இஸ்லாம்.

## II. கல்வி விஷயக் குறிப்புக்கள்

(117) கல்விப்பயிற்சி விஷயத்தில் இந்தியாவின் அவசியங்கள்:—என்பதைப்பற்றி *Dr.* ராதா குமுத முகர்ஜி (லக்ஷ்மணபுரி சர்வகலாசாலையில் போதனாசிரியர்) என்பவர் செய்த பிரசங்கத்திலே பின்வருமாறு அபிப்பிராயப்படுகிறார்:—ஒரு தேசத்தாரின், அல்லது சாதியாரின், பயிற்சியும் நாகரிகமும், அவர் பயிலும் கல்வி முறையைப் பொறுத்திருக்கும். நம்முடைய உபநிஷதங்களும் அக்காலத்துப் போதனா முறையும் இதை நன்கு விளக்குகின்றன. ஆரணியங்களின் மத்தியிலுள்ள ஆசிரமங்களிலே, ஐம்புலன்களை அடக்கித் தம்வசமாக்கிய புருஷோத்தமர்களான தத்துவ ஞானிகள், எப்பொருளினும் மெய்ப்பொருளை அறிவதையே இலக்காகக் கொண்டு, பிரமசரியம் ஏழைமை சரீர உழைப்பு என்னும் மூன்று விரதங்களையும் அநுஷ்டிக்கும்



வித்தியார்த்திகளுக்கு, அவனவன் மனப்போக்குக்கும் புத்தி கோசரத்துக்கும் ஏற்றவாறு, கல்வி புகட்டி வந்தனர். மாணவர் இருவர்க்கேனும் குணசக்திகள் ஒரே தன்மை, அளவினவாய் இல்லாமலிருக்க, இயந்திரத்தில் போட்டரைப்பதுபோல எல்லோரையும் ஒரேவிதக் கட்டுப்பாடான போதனைகளுக்கும் கல்விமுறைக்கும் உட்படுத்துவது தவறாகும், நற்பயன் தராது, குரூரமுமாகும்....... கல்விப் பயிற்சியில் ஆழத்தைப்போல அகலத்தையும் கவனிக்க வேண்டும். மலைபோன்ற மாளிகை யொன்று, ஒரு கூரிய முனையின் மேல் நிற்க முடியாது. இதுகாறும், இந்தியமாதா, புத்தர் முதல் மகாத்மா காந்திவரை, பல மகான்களைத் தந்திருக்கிறாளாயினும், பொதுஜன சமூகத்தின் பொதுப்பயிற்சி மேம்பாட்டைக் கவனியாததால், பல கோடி இந்திய மக்கள் அஞ்ஞான அந்தகாரத்தில் ஆழ்ந்து கிடக்கின்றனர். இதனால், இந்தியர்களின் சராசரி நாகரிக மட்டம், மிகத்தாழ்ந்ததாகவே யிருக்கின்றது; ஆகையால் தான், இந்தியமாதா, வாழ்க்கைப் போராட்டத்தில் தாழ்வுற்றுச் சுயாதீனத்தை இழந்து தவிக்கின்றாள்.......படிப்பாளிகளாகும் நாம் எல்லோரும், பொதுஜன கோடிகளும் அறிவுற்று நமக்குத்துணை நிற்கும்படி, அவர்களையும் படிப்பினால் உயர்த்தினாலொழிய, நாடு முன்னுக்கு வரமுடியாது. மக்கள் அனைவரும் ஒத்த திறமையினராய் உழைக்கமாட்டாத நாட்டார், உலகவாழ்க்கைப் போராட்டத்திலே தோல்வியுறல் நிச்சயம். உயர்தனிவீரர் தம் திறமையால் வென்று தம் சமூகத்தை உயர்த்தும் காலம், கழிந்து போயிற்று. யுத்தத்திலும்கூட வீரசிகாமணிகளின் மற்போர் வாட்போர்க் காலம், போய்விட்டது; கண்ணுக்குத் தெரியாத தூரத்திலிருந்து இயந்திரக் கருவிகளால் போர் நடத்தி வெற்றிபெறும் காலம் இது. யுத்த முனையிலே சண்டை செய்யும் வீரரைப் போலவே, யுத்தத்துக்குச் செல்லாது வீட்டிலிருக்கும் சாமானிய ஜனங்களும் பல பணிகளியற்றி வெற்றியைப் பெறவேண்டி யிருக்கிறது. தனக்கு மட்டும் நிர்வாண மோக்ஷபதவியை விரும்பாது, பொதுஜன நன்மையையும் க்ஷேமத்தையும் நாடி யுழைத்த புத்தபகவானைப் போலவே, நாம் எல்லோரும் பொது ஜனங்களை முன்னுக்குக் கொண்டுவர முயலல் வேண்டும். இந்தியராகிய நாம் முப்பது கோடிக்கு மேலுள்ளோம்; எனவே, ஐந்து ஜெர்மனிகள் சேர்ந்தாலும், நமக்கு இணையில்லை; இங்ஙனமிருந்தும், நமது பொது ஜனங்கள், அறியாமையினால், தசாம்சக்கணக்கிலே லக்ஷ்ன்னங்களுக்குச்

சமானராயிருத்தலால், நமக்கு உலகத்திலே மதிப்பில்லை.... ஒரே விதமான கல்விமுறை நாடனைத்துக்கும் ஜனங்கள் அனைவருக்கும் பொருந்ாதென்பதை நன்குணர்ந்து, ஒவ்வொரு பிரதேசத்துக்கும் ஜனப்பிரிவுக்கும் ஏற்றவாறு பற்பல கல்வி முறைகளைக் கையாள வேண்டும். யாவர்க்கும் இன்றியமையாத எண்ணையும் எழுத்தையும் போதித்தபின், நமது பள்ளிக்கூடங்கள், விவசாயம், வர்த்தகம், கைத்தொழில்கள் முதலிய பல கிளைவழிகளில் கல்வி புகட்ட வேண்டும். இலக்கியப் பயிற்சியைச் சிறந்த நோக்கமாகக் கொண்டுள்ள சலாசாலை மாணவரும் கூட, யாதானும் ஒரு கைத்தொழிலும் பயில வேண்டும். ஸ்பைநோஸா என்ற தத்துவ ஞானி தச்சு வேலை செய்தது, அவர் தத்துவ ஆராய்ச்சிக்கு வலியளித்ததாம்! நாமோ, நமது வலக்கையை இறகோட்டவே பழக்கி யுள்ளோம்; அழியாத ஆனந்தத்தை அளிக்கும் அழகிய பொருள்களை ஆக்கிக் குவிக்கும்படி பழக்க வில்லை. நம் நாட்டில் நடைபெறும் கல்விப்பயிற்சி, நமக்கு வேண்டிய அவசியங்கள் அனைத்தையும் பிரதிபலிக்க வேண்டும்.... இலக்கியப் பயிற்சியே இலக்ஷியமாய் நடந்துவரும் நமது கலாசாலைகளிலும் கூட, இந்தியாவின் பூர்வ சரித்திரமும் நாகரிகமும் நன்கு கற்பிக்கப்படுவ தில்லை. முகம்மதியர், ஆங்கிலேயர் ஆட்சிக்கால விருத்தாந்தங்களே பெரிது மதித்து வாசிக்கப்படுகின்றன. இந்தியரின் பூர்விக நாகரிகம், கிறிஸ்து பிறக்குமுன் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகள் தொட்டுவருவது என்பதற்கு ஆதாரங்கள் கிடைத்து வருகின்றன. பழைய கல்வெட்டுக்களும் காசுகளும் நமது பண்டைச் சரித்திரத்தை விளக்கி யிருக்கின்றன. இவற்றை யெல்லாம் ஆராய்ந்து படியாமல், ஐரோப்பிய நாட்டுச் சரித்திரங்களைப் பள்ளிகளில் படித்துவருவது, எவ்வளவோர் அறிவீனம்! நமது புராதன நாகரிக கிரந்தங்களின் மொழியாகிய ஸம்ஸ்கிருதத்தையும், நமது தாய் மொழிகளையுமே, கலாசாலைகள் பேணிப் பயிலாது புறக்கணித்து வருவது, ஒரு பெருங் குறையாம். இக் குறையை நிவர்த்தி செய்வதும் நமது முக்கிய கடமையாகும்.

## III. சில்லறைக் கலம்பகம்.

(118) மிருக வண்டிகள் :—மாடு குதிரைகளையே விசேஷமாய் வண்டி யிழுக்கச் செய்வர் ; பனிக்கட்டி மிக்க பிரதேசங்களில், ஒரு விதக் கலைமான்களையும் வண்டியில் பூட்டுவதுண்டு. ருஷியாவிலே ஒனுய்களையும், காலிபோர்னியாவிலே தீக்கோழி என்னும் ஆஸ்ட்ரிச் பக்ஷியையும், ஆஸ்திரேலியாவிலே வெள்ளாடுகளையும், வண்டி யிழுக்கச் செய்கின்றனராம்; இவை யாவற்றினும் விந்தையாக, காலிபோர்னியாவிலே, ஒரு குடியானவன், ஒரு முதலையை வண்டி யிழுக்கப் பழக்கி யிருக்கிறான்!



(119) மரணஸ்திரம் :—க்ரிண்டல்-மாத்யூஸ் என்னும் ஆங்கிலேயர் கண்டுபிடித் திருக்கும் கிரணத்தைப் பற்றி, இதற்கு முன் (பஞ்சாமிர்தம்—2-வது காசு-147-ம் பக்கம்) கூறினேம். இப்பொழுது வெல்ஷ் என்னும் மற்றொரு ஆங்கிலேயர், ஐந்துமைல் உயரம் மேற்சென்று, உருக்கிய உலோகத்தை மழைபோல்பொழியவல்ல ஒரு பாணத்தை, உண்டுபண்ணி யிருக்கிறார். இதனால், மரணஸ்திர சிருஷ்டியிலே, ஆங்கிலேயர், அவர்கள் தாயாதிகளான ஜெர்மானியருக்குப் பின்பட்டவரல்லர் என்பது விளங்கும். எப்பொழுதேனும், இந்தியாவின் துர்ப்பாக்கியத்தால் ஆங்கிலேயருக்கும் நமக்கும் போர் நிகழ்ந்தால், இந்த சுகங்களை நாம் நேரில் அநுபவிக்கவும் கூடும்.

(120) விருஷபராஜன் :—கானடாவிலுள்ள ஒரு காளை மாடு, 6 அடி உயரமும், $10\frac{1}{2}$ அடிச் சுற்றளவும், $1\frac{1}{2}$ டன் கனமு மிருக்கிறதாம்.

(121) பரி-நரன் பந்தயம் :—ஒரு குதிரையும் ஹார்ட் என்னும் ஓர் ஆங்கிலேயனும் 6 நாள்களாகப் போட்டி போட்டு ஓடினதில்,குதிரையைவிட மனிதனுக்கே வலிமை யதிகம் என்பது துலங்கிற்று. தினம் 10 மணி நேரம் வீதம், 6 நாளிலே, குதிரை மொத்தம் 337 மைல் ஓடிற்று; 59 வயதுள்ள ஹார்ட் என்பவனே, அதே காலத்தில் 345 மைல் ஓடிப் பந்தயத்தைக் கெலித்தான்.

(122) மழை பெய்வித்தல் :—மின்சார சக்தியைக் கொண்டு, வானத்திலுள்ளமேகங்களை,வேண்டிய விடத்தில் மழைபெய்யச் செய்யும் உபாயத்தைக் கண்டுபிடித்து, அமெரிக்காவிலுள்ள ஒகியோ மாகாணத்தில் அதை ருஜுப்படுத்திக் காட்டினர். இப்படி மழை பெய்யுமிடம் சுருக்கமாயும், பெய்விக்கும் செலவு, மழை பெய்வதாலுண்டாகும் இலாபத்திலும் அதிகமாயு மிருக்கிறது. அந்த உபாயத்தைச் சாதாரணமாய் இலாபகர மாக்குதற் குரிய யுக்தி செய்யப்பட்டு வருகிறது.

(123) இந்தியாவைப்பற்றிச் சில குறிப்புக்கள் :—

| | | |
|---|---|---|
| இந்தியாவின் மொத்த விஸ்தீரணம் | 18 லக்ஷம் | சதுரமைல் |
| இதில் சுதேச ராஜ்யங்களின் ,, | 7 ,, | ,, |
| ,, மொத்தம் இந்தியர் ஜனத்தொகை | 32 | கோடி |
| ,, சுதேச ராஜ்யக் குடிகளின் ,, | 8 | ,, |
| ,, தீண்டாச்சாதியார் ,, | 5 | ,, |
| ,, சுதேச சமஸ்தானங்களின் தொகை | 700 | |
| ,, மொத்தம் சாதிப் பிரிவுகள் | 1800 | |
| ,, பேசப்படும் பாஷைகள் | 130 | |
| ,, எழுதப் படிக்கத் தெரிந்தவர் 100ல் | 7 | பேர் |
| ,, கிராமாந்தரவாசிகள் 100 ல் | 90 | ,, |
| ,, விவசாய ஜீவனம் 100 ல் | 72 | ,, |
| இந்தியாவை ஆளும் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் மொத்தம் | 5000 | பேர் |
| இவர்களுக்குள் ஐ.ஸி.எஸ். வகுப்பினர் | 900 | ,, |

இதனால், ஐரோப்பியரின் சாமர்த்தியமும், இந்தியாவுக்கு அவர்கள் இன்றியமையாமையும் துலங்குகின்றதென்று, பம்பாய் கவர்னராயிருந்த ஸைடன் ஹாம் பிரபு கூறுகிறார். அவர் கணக்குப்படி, ஆண்டுதோறும் இந்தியர் சர்க்காருக்குச் செலுத்தும் வரிப்பணம், சராசரி ஒரு தலைக்கட்டுக்கு, ரூ 3–9–6 தான்; ஆனால் இந்திய அறிவாளர் மதிப்புப்படி, ரூ 6–7–7 ஆகும். மைசூர் திவானாயிருந்த ஸர். எம். விசுவேசுவரையா கூறியுள்ள சில குறிப்புக்கள் பின்வருவன:—

நாடுமுழுதையும் எடுத்துக்கொண்டு சராசரிக் கணக்குப் பார்த்தால் துலங்குவது :—

| | | ஆங்கிலநாடு | கானடா | இந்தியா |
|---|---|---|---|---|
| (1) | ஒரு நபரின் சொத்து | ரூ 6000 ; | 4400 ; | 180 |
| (2) | ,, வருஷவருமானம் | ரூ 820 ; | 550 ; | 53 |
| (3) | ,, வியாபாரம் | ரூ 640 ; | 510 ; | 23 |
| (4) | ஆயிரத்துக் கெத்தனை மரணம் | 14 க்குக் குறைவு ; | — | 30க்கு மேல் |
| (5) | ஒரு நபரின் சராசரி ஜீவியகாலம் | 45— | —— ; | 24 |

இவற்றையெல்லாம் கவனித்தால், நாகரிக நாடுகளிலே இந்தியாவினும் தாழ்ந்த நிலைமையிலுள்ளது, பூமண்டலத்தில் இல்லையென்னலாம்.



# தைப் பொங்கல்

மகர சங்க ராந்திநாள் வந்தது!
நகரமும் [1] பட்டியும் நாடெலாம் திருவிழா;
மனிதரும் [2] மாக்களும் னிமனம் மகிழவ;
[3] வனிதையர் புது நறு மஞ்சள் வாய்குவர்;
இனிய செங் கரும்புகள் இளமகார் ஏந்துவர்;
மனையெலாம் தோரணம், வண்ணமாக் கோலம்;
முற்றந் தோறும் முழுமதி முகத்தியர்,
[4] புத்தடுப் பேற்றிய [5] புதுப்புனை கலங்களில்
[6] முத்தன அரிசியை மொய் உலைப் பெய்து,
பால் நெய் வெல்லம் பருப்புடன் சொரிந்து,
மேல் மலர்ந் தமுதம் மேவுறல் கண்டு,
"பொங்கலோ பொங்கல்!" எனமகிழ் பொலிந்து,
தங்கள் கணவரை அழைக்க, [7] சார்ந்து அவர்,
ஆரிய திராவிட ஆகம விதிப்படி
சூரிய பூசை இயற்றித் தொழுது:
[8] "உலகெலாம் ஒளிதரும் ஒருதனி விழியே!
அலகில் அண்டங்களை ஆக்கி அளித்(து) அழி
முக்குண மேவிய மும்மய மூலமே!
[8] தொக்(கு) அயன் அரி அரன் தோன்றுறு சோதி!"
[9] எழுபரி இரதத் தெழுந்தருள் [10] எழிலோய்!
விழுமிய வேதியர் தொழுதெழு விண்மணி!
சென்ற நாள் [11] மழை அருள் போகியைச் சேவித்து,
இன்றுன திருவடி ஏத்துதும்; நாளை, எம்
கன்று கால் நடைகளைப் பேணுதும், கதிரவ!
என்றும் நீ அன்றோ எங்கள் தாரகம்;
எமக்(கு) அருள் பழுத்(து) எம் கலியெலாம் ஒழித்திட
நமஸ்கரிப்போம் உனைச் சூர்யநா ராயண!
என்றே துதிக்குவர் இன்று.
நன்று தைப் பொங்கல் நன்னாள் வாழியே!

---

[1] சிற்றூர்; [2] மிருகங்கள்; [3] பெண்கள்; [4] புதிய அடுப்பு; [5] புதிய, அலங்கரிக்கப் பெற்ற பாத்திரங்கள்; [6] வெண் முத்துப் போன்ற; [7] கணவர் வந்தடைந்து; [8-8] இந் நான்கு அடிகளும், "நமஸ் ஸவித்ரே, ஜகதேக சக்ஷுஷே, ஜகத் ப்ரஸூதி ஸ்திதிநாச ஹேதவே, த்ரயீம் மயாய த்ரிகுணாத்ம தாரிணே, விரிஞ்ச நாராயண சங்கராத்மனே" என்பதன் மொழி பெயர்ப்பு; [9] ஏழு குதிரைகள்; [10] அழகுள்ளவனே; [11] மழையைத் தரும் போகி என்னும் இந்திரன்.

# அறுபத்து மூவர்களின் காலம்

ஸ்ரீ. K. R. சுப்பிரமணிய ஐயர், M.A;
இராஜ மஹேந்திரபுரம்.

அறுபத்து மூவர்களின் வரலாறு பெரிய புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பெரியபுராணம் அனபாய சோழரின் மந்திரியாயிருந்த சேக்கிழாரால் எழுதப்பட்டது. அவ்வரசர் சமண புராணமாகிய, சீவகசிந்தாமணியை அதிக விருப்புடன் படிப்பதைப் பார்த்து, அரசருக்குச் சைவமதத்தில் ஆசை ஊட்ட வேண்டுமென்று, இப்புராணத்தை எழுதின சேக்கிழார், அனபாயனைத் தன்னுடைய அரசனாகவும், அவனுடைய சபையில் தன் நூலை அரங்கேறறினதாகவும், பெரிய புராணத்தில் சொல்லுகிறார்:—

"மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வந்திருப் பேரம்பலம் செய்ய,
தூய பொன்னணி சோழனீ டூழிபார்,
ஆய சீர் அன பாயன் அரசவை."

அனபாயனுக்கு அபயனென்றும், குலோத்துங்கனென்றும் வேறு பெயர்களுண்டு:—

"சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன் தில்லை திருவெல்லை
பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறென்றும் புவிகாக்கு
மன்னர் பெருமான் அனபாயன் வருந்தொன் மரபின் முடிசூட்டும்.

திருவாரூரில் தியாகராஜஸ்வாமி கோவிலில் ஒருகல்வெட்டு இருக்கிறது. அதில், அனபாயனுக்கு, கோ ராஜகேஸரி வர்மன் திருபுவன சக்ரவர்த்தி குலோத்துங்க சோளதேவன் என்று ஒரு பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து, அனபாயன் முதலாவது குலோத்துங்கனை இருக்கவேண்டுமென்று ஊகிக்கப்பட்டிருக்கிறது (1070-1118). ஆனல் மேல் வரையப்பட்டிருக்கிற பாட்டிலிருந்து, அபயன் குலோத்துங்கன் அனபாயன் இவர்கள் வெவ்வேறு ராஜாக்களென்றும் ஊகிக்கலாம்,





அவ்வூகம் ஸரியானல், அனபாயன் முதலாவது குலோத்துங்கனுக்குப்பின் ஆண்ட அரசர்களில் ஒருவனை இருக்க வேண்டும்.

சேக்கிழார் பெரிய புராணத்திற்கு ஆதரவு, நம்பி ஆண்டான் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதி. இராஜ ராஜ அபயகுல சேகரன் காலத்தில் நம்பி இருந்ததாக உமாபதி சொல்லுகிறார். முதலாவது ராஜ ராஜன் (985-1013) காலத்திலிருந்து சில கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. அவைகள் தேவாரம் ஓதுவதற்கும் மூவர் சிலைகள் வைப்பதற்கும் அரசன் செய்த ஏற்பாடுகளை குறிக்கின்றன ஆகையால், அனேகமாய் அவர் காலத்தில் தான், நம்பி, தேவாரப் பதிகங்களைச் சேர்த்திருக்க வேண்டும்.

சில கல்வெட்டுக்களிலிருந்து, ராஜ ராஜன் காலத்திற்கு முந்திக்கூட சில அரசர்கள் தேவாரம் ஓதுவதற்கு ஏற்பாடு செய்ததாகத் தெரிகிறது. உமாபதியின் திருமுறை கண்ட புராணத்தில், ராஜராஜன் பரதேசிகளிடம் சில பதிகங்களைக் கேட்டதாகவும், அதிலிருந்து எல்லாப் பதிகங்களையும் கேட்க ஆவலுற்றானென்றும், எல்லாப் பதிகங்களையும் சேர்க்க நம்பியை வேண்டிக் கொண்டானென்றும், பொல்லாப் பிள்ளையார் ஒத்தாசையால் சிதமபரம் கோவிலில் நம்பி தேவாரப்பதிகங்களை தேடி எடுத்தாரென்றும், அப்பதிகஙகளில் சில செல்லரித்து வீணய்ப் போய்விட்டன வென்றும், தக்கினதை நம்பி சேர்த்து ஏழு முறைகளாகப் பிரித்தாரென்றும், சொல்லுகிறார்.

'இராஜ ராஜன் காலத்திற்கு முன்னிருந்தே ஓதுவார்கள் இருந்தாரென்றால், நம்பி, இவ்வளவு சிரமப் படுவானேன்? மூவர் காலத்திலிருந்து நம்பி காலத்திற்குத் தேவாரம் எப்படி வந்தது? தேவாரம் எழுதி வைக்கப்பட்டிருந்ததா? அல்லது வேதத்தைப்போல, வாயால் சொல்லி வந்ததா? மூவர் காலத்தில், தமிழ் எழுதது இருந்ததா? இருந்திருந்தால், எந்த லிபி இருந்தது? மூவர் உண்மையைக் கடைப்பிடித்தாரென்று எண்ண வேண்டுமாகையால், அவர்கள பாடியிருக்கிற பதிகங்களிலுள்ள அதிசயச் செய்கைகளை நாம நம்புகிறதா?' என்ற பல கேள்விகள், நம்பியின் திருமுறைத் தொகுதியைப்பற்றி நினைத்தால், ஏற்படும்.

சுந்தரரின் திருத்தொண்டத்தொகையை ஆதாரமாய்க்கொண்டு, நம்பி அந்தாதியை எழுதினர். திருத்

தொண்டத் தொகையில் தொண்டர்களின் வரலாற்றைப் பற்றி ஒன்றுமில்லை. சுந்திரரின காலம் ஒன்பதாம் நூற்ருண்டு; கொல்லமாண்டு ஆரம்பித்த சேரமான் பெருமாள், சுந்திரரின் ஸ்நேகர். சிவன் சீட்டின்மேல், பாணபத்திரன், இச்சேரமானிடமே பணம் பெற்ருன். பாணபத்திரன், வரகுணனின் பாடகன். கல்வெட்டுக்களிலிருந்து, இவ்வரகுணன், ஒன்பதாம் நூற்ருண்டில் இருந்ததாக ஊகிக்கிருர்கள்.

சுந்திரர் திருத்தொண்டத் தொகையில் 62 தொண்டர்களேயும் குறிக்கிருர். அவரைச் சேர்த்து மொத்தம் 63. இவர்களில் சிலர் சம்பந்தர் காலத்திற்கு முன்னிருந்தார்கள், சிலர் சம்பந்தர் காலத்தவர்கள், சிலர் பிந்திய காலத்தவர்கள். சம்பந்தர் காலம் 7-ம் நூற்ருண்டென்று ஊகிக்கப்பட்டிருக்கிறது. அவர் காலத்திலிருந்த சிறுத்தொண்டர், பல்லவ அரசனுகிய முதலாவது நரஸிம்மவர்மனின் தளர்கர்த்தராயிருந்து, வாதாபி என்னும் நகரத்தைக் கொளுத்தினுர். அப்பரும் சம்பந்தர் காலத்தவரே. அவர், தன் காலத்திய பல்லவராசனை ஜெயினத்திநின்று சைவமதத்திற்குத் திருப்பினுரென்று, பெரிய புராணம் கூறுகிறது. அவ்வரசன் குணதரேச்வரமென்று ஒரு கோயில் கட்டினுனம். அக்கோயிலுக்கு முதலில் குணபரேச்வரம் என்று பெயர். திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டொன்றில், குணபரனென்ற ஓர் அரசன், ஜெயினுயிருந்து சைவனுனென்றிருக்கிறது. முதலாவது நரஸிம்மவர்மனது தகப்பனை முதலாவது மகேந்திர வர்மனுக்கு, குணபரனென்று ஒரு பெயருண்டு (7-ம் நூற்ருண்டு)

தேவாரத்தில் சம்பந்தரும் அப்பரும் சில தொண்டர்களேப் புகழ்கிருர்கள். பெரிய புராணக் கதைகளினின்று, அத்தொண்டர்கள், இவ்விருவர்கள் காலத்தவரல்லரென்று தெரிகிறது. சண்டேச்வரர், செங்கண்ணர், கண்ணப்பர், இம்மூவர்களேயும், சம்பந்தரும் அப்பரும் அடிக்கடி குறிக்கிருர்கள். உதாரணங்களாக:—

"வந்தமண லாலிங்க மண்ணியின் கட் பாலாட்டுஞ்
சிந்தைசெய்வோ ன்றன் கருமந் தேர்ந்துசிதைப் பான் வருமத்
தந்தை தன்னைச் சாடுதலும் தண்டீச னென்றருளி."

"செருவந்திய செம்பியன் கோச் செங்கண்"

"கண்ணப்பர்க் கருள் செய்த கயிலே யெங்கள்."

பெரிய புராணத்திலிருந்து லிங்கவழிபாடு பூர்விகமானதென்றும், கண்ணப்பர் காலத்தில் ஆகமவழிபாடு இருந்த



தென்றும், கோவில்களுக்கு முன் லிங்கங்கள் இருந்தனவென்றும், சொல்லலாம். காரைக்கால்அம்மையார் ஒரு பழைய தொண்டர். திருவாலங் காட்டுக்குச் சென்ற சம்பந்தர், தான் அப்புண்ணிய பூமியைக் காலால் மிதிக்க மாட்டேனென்ருராம். அம்மையார் தலேகீழாய் நடந்து சிவனைத் திருவாலங் காட்டில் தாண்டவம் செய்யச் சொன்னதாகக் கதை யிருக்கிறது. திருமூலர் மற்ருெரு பழைய தொண்டர். அவர், சம்பந்தர் காலத்திற்கு முந்தியிருந்தவர் என்பதற்கு ஐயமில்லை. ஏனென்ருல், சம்பந்தர் காலத்திலே ஆகம வழிபாட்டோடு அநேக கோயில்களிருந்தன. திருமூலர் புராணம் திருமூலர் வடக்கத்தியாரென்றும், சம்ஸ்கிருத நிபுணரென்றும், ஆகமங்களின் சாரத்தை முதல் முதல் தமிழில் எழுதினவரென்றும் கூறுகிறது. மூர்த்தி நாயனுர், மதுரை களப்ரால் ஆட்சி செய்யப்பட்டபோது இருந்தாரென்று கதை யிருக்கிறது. கல்வெட்டு ஆராய்ச்சி செய்பவர்கள், களப்ர ஆட்சி 6-ம் நூற்ருண்டில் நடந்திருக்க வேண்டுமென்று சொல்லுகிருர்கள். நமிநந்தியும் தண்டியும் ஒரே காலத்தவர்கள். தேவாரத்தில் "நாவியல் சீர் நமி நந்தி யடிகளுக்கு நல்குமவன்" என்று சம்பந்தர் சொல்லுகிருர். அப்பர் சாக்கியனுரையும் கணம்புல்லரையும் வைத்து ஒரு பதிகம் பாடியிருக்கிருர்.

"கல்லினு லெறிந்து கஞ்சிதாமுனுஞ் சாக்கியனுர்"

"கணப்புல்லர்க் கருள்செய்து காதலா யடியார்க்கென்றும்"

சம்பந்தர் காலத்தவர்கள் 10 பேர்கள். யாழ்ப்பாணர் சம்பந்தரின் பாணர். அப்பர் என்ற பெயர் அக்குழந்தைத் தொண்டரா விடப்பட்டது. அப்பூதி வீட்டில் அப்பர் ஒரு அதிசயச் செய்கை செய்தார். "அஞ்சிப் போய்க் கலிமெலிய வழலோம்பும் அப்பூதி" என்று, அவர் தேவாரத்தில் காணலாம். முருகர், திருநீலநக்கர், குங்கிலியர் இவர்கள், சம்பந்தர் அப்பர்களுக்குப் பணிவிடை செய்ததாகவும், சம்பந்தர் கலியாணத்தில் மோட்சம் அடைந்ததாகவும் பெரிய புராணம் கூறுகிறது. சிறுத்தொண்டரை வைத்துச் சம்பந்தர் ஒரு பதிகம் பாடியிருக்கிருர். சம்பந்தருக்குத் திருச்செங்கங்காட்டங் குடியில் சிறுத்தொண்டர் பணிவிடை செய்ததாக விருக்கிறது. "பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாக." நெடுமாறன், மங்கை, குலச்சிறை, இம்மூவரும் தாம், நம் குழந்தைப் பெருமானுடைய கீர்த்தியை

ஓங்கச் செய்தவர்கள். தேவாரத்தில் வருவன:—

"மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைமடமானி."

"கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை குலாவிநின் றேத்து."

அதிலேயே, மங்கை, சோழராஜன் புத்திரி என்று நம் சம்பந்தர் சொல்லுகிறார்

"மண்டெலா நிகழ மன்னனாய் மன்னு மணிமுடிச்சோழன் தன் மகளாம்."

10 அல்லது 12 தொண்டர்கள், சுந்திரர் காலத்தவர்கள். அவர் தகப்பன் சடையனாரும், தாய் இசை ஞானியும் இருவர்கள். திருமுனைப்பாடிச் சிற்றரசு நரசிங்கன் அவரை வளர்த்த பிதா. கோட்புலி, குறம்பன், சோமாசி மாரன், இம்மூவர்களும் சுந்திரரிடத்தில் வெகு பத்தியுள்ளவர்களென்று கதை சொல்லும். கலிக்காமனுக்கும் சுந்திரருக்கும் எப்போதும் பகை. விறன் மிண்டனுக்கும் சுந்திரரைக் கண்டால் படாதாம். மானக்கஞ்சாறன் கலிக்காமனின் மாமனும். சேரமானும் சுந்திரரும் ஆத்





மார்த்த சிநேகர்கள். ஒரு வெள்ளை யானையி லேறி கயிலாசம் போனார்கள். சுந்திரர், "கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான், காடவர்கோன் கழற்சிங்கன்" என்று, நிகழ் காலத்தில் சொல்லுகிறதால், ஒருக்கால் கழற்சிங்கன் அவர் காலத்தவனோ என்று சந்தேகிக்க இடமுண்டு. அப்படி யிருந்தால், சிருத்துணையும் அவர் காலத்தவராவார். ஏனென்றால், சிருத்துணை கழற்சிங்கன் ராணியின் மூக்கை அறுத்ததாகக் கதை.

இன்னும் 29 தொண்டர்களின் காலத்தை நிர்ணயிக்க முடிய வில்லை. அவர்களில், புகழ்ச் சோழனும் எரிபத்தனும் ஒரே காலத்தவர்கள். கணநாதன் சரித்திரத்திலிருந்து, அவர் சம்பந்தருக்குப் பிற்பட்டவரென்று விளங்கும். இவ்விருபத்தொன்பதின்மரில் அநேகமாய் ஒரு பாதிக்கு மேல் சம்பந்தருக்குப் பின் இருந்தவர்களென்று ஊகிக்கலாம். எல்லாரும் சுந்திரருக்கு முன் இருந்தவர்களே.



சர்வ சமய




சமரச தர்சனி

(649-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

46. "மெய்யைப் பொய்யுடன் கலக்காதீர்கள்; இன்னும்
உண்மையை ஒளிக்காதீர்கள்"—குர்ஆன்.

47. "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்;
ஆகுல நீர பிற"—திருக்குறள்.

48. "நாரங்கொண்டார் நாடுகவர்ந்தார், நடையில்லா
வாரங்கொண்டார், மற்றொருவர்க்கா மனைவாழும்
தாரங்கொண்டார், என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய், கண்டகர் உய்ந்தார் எவர்? ஐயா!"
—கம்பராமாயணம்.

49. "இறப்ப நுமக்கடுத்த எவ்வநோ யாவும்
பிறர்க்கும் அஃ தாமென்று கொள்மின்—உறக்கருதி
எவ்வா றுமக்குறுதி எண்ணுதிர்நீர், எல்லார்க்கும்
அவ்வாறே எண்ணல் அறம்"—பெருந்தேவனார்பாரதம்

50. "வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்கும் தீவினை;
வெகுளியே குணம் தவம் விரதம் மாய்க்குமால்;
வெகுளியே அறிவினைச் சிதைக்கும்; வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன்றில்லையால்"—
காஞ்சிப்புராணம்.

---





# தொழிலும், மரணமும், வியாதியும்.

ருஷிய மகான் லியோ டால்ஸ்டாய்

எழுதிய சிறு கதை.



ஸ்ரீ. K. விசுவநாதையர், B. A., L. T., சித்தூர்.

பின் வரும் புராணக் கதை தென் அமெரிக்கா இந்தியர்களுக்குள் வழங்குகிறது:—

கடவுள், முதலில் மனிதர்களைச் சிருஷ்டித்து, அவர்கள் கஷ்டமின்றி ஆனந்தத்துடன் வாழவேண்டு மென்கிற உள்ளக் கருத்தோடு, அவர்கள்பால் கருணை பூண்டு, வேலை செய்ய வேண்டிய அவசிய மில்லாமலும், வீடு வஸ்திரம் உணவு இவைகளின் தேவையில்லாமலும், நியமித்து வைத்தார். மனிதர்கள் அவ்வாறு பல நூற்றாண்டுகள் வியாதி என்பதே தெரியாது வாழ்ந்து வந்தார்கள்.

இங்ஙன மிருக்கையில் ஒரு நாள், கடவுள், "ஜனங்கள் எவ்விதம் ஜீவிக்கிறார்கள் பார்ப்போம்," என்று நோக்குகையில், அவர்கள், அருளால் அளிக்கப்பட்ட மாசற்ற வாழ்க்கையில் ஆனந்தங் கொள்ளாது, "நாமே பெரியோம்" என்னும் அகந்தை மேலிட்டு, ஒருவரை யொருவர் பொருட்படுத்தாது, ஒருவரோ டொருவர் கலகம் செய்துகொண் டிருந்தனர். சன்மார்க்கத்தில் நின்று, வாழ்க்கையைக் களிப்புடன் அனுபவியாது, கடவுளையும், அவர் சிருஷ்டியையும் நிந்தித்து, மனம்போன போக்கெல்லாம் நடந்து, தங்களைத் துன்பத்திற்கு ஆளாக்கிக் கொண்டிருந்தனர்.

இதைக் கண்ணுற்ற கடவுள், "தன்னந் தனியே, மனிதர்கள் ஜீவிக்க முயலுவதா லன்றோ இவ்விதம் நேர்ந்தது. தொழில் செய்யாது, இவர்களை ஜீவிக்க விடுதல் நல்ல தன்று. இவர்களைப் பசியினாலும், குளிரினாலும் கஷ்டப்படும்படி செய்து, அக் கஷ்டங்களை நிவர்த்தி செய்து கொள்ளும் வண்ணம், பூமியை உழுது, பயிர் செய்து, பழங்கள் தானியங்கள் இவைகளைச் சேகரித்து ஜீவனம் செய்யும்படி ஏற்பாடு செய்தல் வேண்டும். தொழிலே மனிதர்களை ஒற்றுமைக்குக் கொண்டுவரும் உபாயம். ஏனெனில், மரங்களை ஒருவராலேயே வெட்டித் தள்ளுவதாவது, வெட்டின மரத்

துண்டுகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோவதாவது, வீடுகள் கட்டுவதாவது, ஆயுதங்கள் தயார் செய்வதாவது, விதைகள் விதைத்து விளைவை அறுப்பதாவது, நூல் நூற்று நெய்வதாவது, உடைகளைத் தைப்பதாவது, எவனும் தன்னந்தனியே செய்து வாழ்தல் இயலாது. எவ்வளவுக் கெவ்வளவு, நட்புடன் ஒருவரோ டொருவர் பழகுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு, தொழில்கள் ஒற்றுமையால் செவ்வனே நடைபெற்று நிறைவேறுவது மன்றி, அவர்களின் ஜீவியமும் விருத்திப்பட்டு ஆனந்தத்தை அளிக்கும். ஆகையால், இதுவே அவர்களை ஒற்றுமை மார்க்கத்தில் திருப்பும்வழி'' என நினைந்து, அவ்வண்ணமே ஆஜ்ஞாபித்துச் சென்றனர்.

இப்படிப் பல காலஞ் சென்றன. ''ஜனங்கள் இப்பொழுது எவ்விதம் ஜீவிக்கிறார்கள் பார்ப்போம்,'' என்றெண்ணி, திரும்பவும் வந்து பார்த்தார்.

மனிதர்களோ, முன்னிலும் கெட்டவர்களா யிருந்தார்கள். ஒற்றுமை யின்றித் தொழில் செய்தல் முடியாமையால், ஒற்றுமையாகவே தொழில் செய்தார்கள்; ஆயினும், அவர்கள் எல்லோரும் ஒற்றுமையாக வாழ வில்லை. கூட்டங் கூட்டங்களாகப் பிரிந்து, ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தின் பாத்தியங்களைத் தாமே அனுபவிக்கவேண்டு மென்கிற கருத்துடன், ஒவ்வொருவரும் மற்றொருவர் செய்யும் தொழிலில் குறுக்கிட்டு, சண்டை சச்சரவுகளில் காலத்தையும், பலத்தையும் வீண்போக்கி, முன்னிலும் அதிகமாகத் தங்களைத் துன்பங்களுக்கு ஆளாக்கிக்கொண் டிருந்தனர்.

மனிதர்கள் இவ்வித ஏற்பாட்டிலும், அறிவு வாராதவராய்க் கெட்டுப்போவதைக் கண்டு, ''இவர்களுக்கு மரணத்தை உண்டு பண்ணல் வேண்டும்; மரணகாலம் எப்பொழுது என்று தெரியாதிருக்க வேண்டும்; இங்ஙனம் ஏற்பாடு செய்தால், மனிதர்கள் எந்த நிமிஷத்திலும் இறந்து போதலாகும் என்பதைக் கருதினவர்களாய், வாழ்க்கையின் நீர்க் குமிழிபோலும் அநித்திய சுபாவத்தை ஆலோசித்து, ஒருவர் பால் ஒருவர் துவேஷம் கொள்ளாமலும், தங்கள் சிற்றுயிரை நாசஞ் செய்து கொள்ளாமலும், ஒற்றுமையோ டிருப்பர்'' என்றெண்ணி, அவ்வண்ணமே நியமித்துச் சென்றனர்.

சில நாட்கழித்துத் திரும்பி வந்து பார்க்கையில், இதுவும் சரியாக நடைபெற வில்லை. மனிதர்கள் அபிவிருத்தி யடையாததைக் கடவுள் கண்டார்: பலமுள்ள மனிதர்கள், பல ஹீனர்களிடம் சென்று, மரணம் அவர்களுக்கே நிச்சயம் என்பதாக



ஆலோசனை செய்து, அவர்களைக் கொல்லுவதாகப் பயமுறுத்தி, அவர்களில் பலரைக் கொன்று, தமக்கு இலாபத்தைச் சம்பாதிக்க ஆரம்பித்தார்கள். இவ்விதமாக ஜீவனம் நடப்பதில், பலசாலிகளும் அவர்களின் சந்ததிகளும், வேலை செய்யாது சோம்பித் திரிந்து கெட்டனர். பலஹீனர்களோ, ஓய்வு ஒழிவு இல்லாது கிரமத்திற்குமேல் அதிக வேலை செய்து, மனமேங்கித் தவிக்கலானார்கள். இருதிறத்தாரும் ஒருவரை யொருவர் வெறுத்தும், பயந்தும், தங்கள் ஜன்மத்தை அதிகம் துக்கப்படுத்திக்கொண் டிருந்தார்கள்.

இதைக்கண்டு, கடவுள், இவர்களைச் சீர்திருத்தஞ் செய்யும் பொருட்டு, கடைசியாகப் பலவிதமான வியாதிகளை அனுப்பினர். ''வியாதி வருதல் இயற்கை யென்று மனிதர்கள் தெரிந்துகொள்ளும் பக்ஷத்தில், தங்களுக்குப் பிணி வருங்காலத்தில் பிறரின் உதவி வேண்டுமென்று நினைத்து, சௌக்கியமாகஇருப்பவர்கள், நோயாளிகளைக்கண்டு பரிதபித்து அவர்களுக்கு உதவிசெய்து ஒற்றுமையோடு வாழ்வார்கள்,'' என்று கடவுள் கருதினர்.

சில காலஞ் சென்ற பின்னர்த் திரும்பி வந்து பார்க்கையில், மனிதர்கள் முன்னிலும் அதிகமாகக் கெட்டிருக்கக் கண்டார்.

கடவுள், எவ்விதமான இடுக்கண்கள், மனிதரை ஒன்று சேர்ச் செய்யும் என்று நினைத்தாரோ, அவைகளே இவர்களை அதிகமாகப் பிரித்து வைத்தன. திடமுள்ளவர்கள், எவர்களை வேலை செய்யும் வண்ணம் கட்டுப்பாடு செய்தார்களோ, அவர்களே வியாதி வந்த காலத்திலும் அவர்களைச் சுவனித்துக் கொள்ளவேண்டு மென்று தீர்மானஞ் செய்து, வியாதியைப் பற்றிய கவலை தங்களை அணுகா வண்ணம் செய்துகொண் டிருந்தார்கள். ஆனால், வேலை செய்தும், நோயாளிகளைக் கவனித்தும், களைத்துப் போனவர்கள், தமக்குள் இருந்த நோயாளிகளைக் கவனிக்க முடியாமையால், பல நோயாளிகள், உதவி யொன்றுமின்றி, ஒருவராலும் கவனிக்கப் படாதவர்களானார்கள். இதுவன்றி, இந்நோயாளிகளைக் காண்பதினால், தனவந்தர்களின் ஆட்டபாட்ட ஆனந்தத்திற்குக் குறைவு வாராவண்ணம், இவர்களுக்கு ஒருபுறமாக வைத்தியசாலைகளைக் கட்டி, அவைகளில், கூலி வைத்தியர்களால், இரக்கமின்றி, வெறுப்புடன் சிகிச்சை செய்யப்பட்டது. அவர்கள் கஷ்டத்தை அவர்களே அனுபவித்தும், இரக்கப்படுவாரின்றி இறந்தும், போகும்படியான கதியாயிற்று.

மேலும், மனிதர்கள், பலவியாதிகள் தொற்றுவியாதிகள் என்று அறிந்துகொண்டு, இவைகளுக்குப் பயந்து, இவ்வித நோய்

களுக்கு உட்பட்ட மனிதர்கள் தங்களை அணுகவொட்டாமலும், அவர்கள்பால் நெருங்குவோர்களைத் தடுத்தும், வந்தார்கள்.

பிறகு கடவுள், பலவித உபாயங்கள் செய்தும ஜனங்கள் தங்கள் சௌகரியத்தை அறிந்துகொள்ளாதவர்களாய் இருப்பதைக் கண்டு, அவரவர்கள் கஷ்டங்களாலேயே, அவரவர்கள் தெரிந்து கொள்ளவேண்டுமென்று நினைத்து, அவர்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும்படி விட்டு விட்டுச் சென்றார்.

மனிதர்கள், தாம் ஆனந்தப்படக்கூடுமென்றும், ஆனந்தத்தில் ஜீவிப்பதே கடவுள் கருத்தென்றும் அறியாது, அநேக வருஷ காலங்களாக, துக்கக் கடலில் உழன்றனர். வாழ்க்கையில் அலுப்புற்றனர்; பிணி, மூப்பு, மரணங்களால் துன்புற்றனர். காமக், குரோத லோப மோக மத மாத்ஸல்லியம் என்னும் குற்றங்கள் அமைந்த செய்கைகளால், தங்களுக்குத் தாங்களே விளைவித்துக் கொண்ட கர்மபலன்களைப் பொறுக்க இயலாது கதறினர். பிறகு, தாம் இதுகாறும் சென்ற மார்க்கம், நரக மார்க்கமே யொழிய நன் மார்க்கமாகாதென்று, காலக்கிரமத்தில் ஆலோசிக்க யத்தனித்தனர்.

இப்பொழுது, கொஞ்சகாலமாக, சிலருக்கு ஞானம் தோன்றி "சோம்பித் திரிதல் மாந்தர்க்கு இழிவு. உழைத்தலினும் மேலான நலமில்லை. உழைத்தல் கௌரவ ஹீனமும் ஆகாது; தண்டனையுமாகாது. உற்சாகத்தோடு ஒத்துழைத்தலே, ஒற்றுமைக் கிடம். மரணமானது, ஒவ்வொரு மனிதனுக்கும், சதாகாலமும், பயமுறுத்தி, 'வாழ்க்கை நிலையாமை, யாக்கை நிலையாமை,' என்னும் ஞானத்தை நினைப்பூட்டும் அறிகுறி யெனத்தெரிந்து, ஒருவரோடொருவர் எப்பொழுதும் நேசித்துக் காலத்தைக் கழித்தல் வேண்டும். பிணியானது, ஒருவருக்கொருவர் அன்பு கசிந்து, உதவிபுரிந்து ஐக்கிய பாவத்தை மேலிடச் செய்யும் நண்பனேயன்றி, பிரித்தற்கு வந்த அன்னியனல்லன்," என உணர்ந்து, 'மானிட சேவையே மாதவசேவை,' எனத் துணிந்து அவர்கள், தம் வாழ்க்கையையே லோகோபகார நிமித்தம் தியாகஞ் செய்து வருகின்றனர்.

---

"சத்தியம் உரைக்க; நாளும் சகல பல் லுயிர்கட் கெல்லாம்
நித்தலும் இதமே செய்க; நினைப்பது சிவத்தை என்றும்;
அத்தன் வே தாகமத்தின் அருளிய பொருள் இம் மூன்றும்
எத்திறச் சமயத் தோர்க்கும் எம்மதங் களுக்கும் இட்டம்"—

சிவ-மெய்ம்மொழி.




(669-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீமதி M. லக்ஷ்மி அம்மாள்,
(B. A. HONS.) லண்டன்.



ந்தக் கோடைகால முழுவதும் வெயிலைக் காட்டிலும் மழைதான் அதிகமாயிருந்தது. சேர்ந்தாற்போல் இரண்டுநாள் மழைபெய்தால் அவ்வூர் (வான்டேஜ்) தெருக்களெல்லாம் வெறும் சகதியாகிவிடும்; அவ்விடத்துப் பூமி வெகு மேடு பள்ளமானதால், எங்கே பார்த்தாலும் குட்டங் குட்டமாய்த் தண்ணீர் தேக்கி நிற்கும். பந்தாடவும், பநதடி மைதானத்தில் எல்லாரும் ஒன்றுகூடி உ சாப்பிடவும், அவ்வூர் ஸ்திரீகள் முன்கூடிச் செய்திருந்த ஏற்பாடுகள் எல்லாம் வீணாய்ப் போகவே, ஒழிந்த வேளைகளில் கூடிக் கூடிப் பேசுவதைத் தவிர, அவர்களுக்கு வேறு பொழுதுபோக் கில்லை. ஒரு 'ஸினிமா' கூட இல்லாத வெறும பட்டிக்காட்டிட மென்றும், குளிர் காலத்துக்குப் பின் மழை காலம் வந்ததேயொழிய, கோடையை ஒருவரும் இன்னும் காண வில்லையென்றும், ஊரையும் காலத்தையும் நாங்கள் அடிக்கடி பழித்தோம். "எங்களுக்குத்தான் தீராது வீட்டு விசாரம்; சட்டென்று ஓரிடத்துக்கும் போவதற் கில்லை. பத்து நாளைக்குப் புஸ்தகங்களைக் கட்டி வைத்துவிட்டு, வேடிக்கையாய் எங்கேயாவது நீ போய்விட்டு வருகிறதுதானே" என்று, நான் குடியிருந்த வீட்டு அம்மாள், ஒருநாள் என்னிடம் சொன்னாள். அது நல்ல யோசனைதான் என்றெண்ணி, நான் ஆக்ஸ்போர்டுக்குப் புறப்பட்டுப் போய், சிலநாள் அங்கிருந்தேன். பார்க்கப் பார்க்க அவ்வூரின் அழகும் புகழும் என் மனதிற் பதிந்து, ஒருவிதப் பிரமையை உண்டாக்கின. சிற்றளவில் பெரும் பேறுகள் பெற்றிருப்பதுதான், அந் நகரத்துக் குள்ள தனிச் சிறப்பு; லண்ட

ணின் மகிமையோ, அதன் பெரும் போக்கைப் பொறுத்தது ; வேறு விதமானது.

அப்பொழுது 'ஸ்ட்ராட்போர்'டில் கோடை நாள் ஷேக்ஸ்பியர் உற்சவம் நடந்துகொண் டிருந்தது. அங்கே ஷேக்ஸ்பியர் நாடகங்க ளாடப்படும் உற்சவ தினங்களில், ஆக்ஸ்போர்டி லிருந்து அவ்வூருக்கு 'ஸ்பெஷியல்' பஸ்கள் போய்த் திரும்புவ துண்டு. டிக்கெட்க ளெல்லாம் முன்னதாகவே விற்றுப் விட்டதால், உற்சவத்தின் கடைசி நாளைக்கு மட்டுந்தான், எனக்கு டிக்கெட் கிடைத்தது. காலை பத்து மணிக்கு நாங்கள் இருபது பிரயாணிகள் சேர்ந்து ஒரு பஸ்ஸில் ஏறிக்கொண்டோம். அன்று முழுதும் விடாமல் மழைபெய்தது; ஓரத்தில் உட்கார்ந்திருந்தவர்கள் தூவானத்தால் நனையவேண்டி யிருந்தது. ஒரு வேளை மற்ற ஜனங்கள் மழைக்குப் பயப்பட்டு அன்று ஸ்ட்ராட்போர்டுக்குப் போகாம லிருந்தால், அதிகக் கூட்டமில்லாமல் சௌகரியமா யிருக்குமென் றெண்ணி, நாங்கள் சந்தோஷப்பட்டோம்.

ஆக்ஸ்போர்டி லிருந்து ஸ்ட்ராட்போர்டு சுமார் முப்பத்தைந்து மைல் தூரமுள்ளதாம் ; அந்தப்பக்கம் அழகிய பிரதேச மென்று பேர்போனது; வழி நெடுக வயல்களும் தோப்புக்களும் கிராமங்களும் தென்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும், அவ்வூர் ஜனங்கள் சிலர் யுத்தத்தில் உயிரை விட்டதற் கடையாளமாக, வாடியனவும் புதியனவுமான பூமாலைகள் சாத்தப்பட்டு, ஒரு ஸ்தம்பமோ, சிலுவையோ, ஏதோ ஒரு வகை ஞாபகச்சின்ன மிருந்தது.

ஆவன்நதிப் பாலத்தைத் தாண்டி, எங்கள் பஸ் ஸ்ட்ராட்போர்ட் போய்ச் சேர்ந்தது. அங்கு நின்ற மற்ற பஸ்களையும் மோடார்களையும் பார்த்து, கூட்டத்துக்குக் குறைவில்லை யென்று தெரிந்து கொண்டு, நாங்கள் ஊரை நோக்கி விரைந்து நடந்தோம்.

ஸ்ட்ராட்போர்ட், சாதாரணமான ஊரே ; அங்குள்ள ஷேக்ஸ்பியர் ஞாபகச் சின்னக் கட்டடம், அதன் பெருந் தோற்றத்தால், ஊரையே தூக்கி யடிக்கிறது. அந்தக் கட்டடத்துக் கடுத்த தோட்டத்தில், ஷேக்ஸ்பியர், தான் சிருஷ்டித்த நாடக பாத்திரங்கள் நால்வர்சூழ வீற்றிருப்பதாகச் செய்த ஒரு பெரிய சிற்ப 'மானுமென்ட்' இருக்கிறது. அவ்வூர்க் கடைகளில் உள்ள சகல சாமான்களும், ஷேக்ஸ்பியர் பெயரைச் சொல்லிப் பிழைத்துப் போகின்றன. சட்டென்று கண்ணுக்குத் தென்படுவன,




வில்யம் ஷேக்ஸ்பியர்

புஸ்தகக் கடைகளில் அவர் இயற்றிய நூல்களும், அவர் காலத்துப் புஸ்தகங்களும்; படக் கடைகளில், அவர் படமும், அவர் காலத்தவர் படங்களும், அவ்வூர் விசேஷ ஸ்தலங்களின் படங்களும், மாடல்களும்; பீங்கான்கடைகளிலும் சில்லறைச் சாமான் கடைகளிலும், அவர் பிறந்த வீட்டின் படமும், அவர் முத்திரையிடப்பட்ட பாத்திரங்களும், தோற்பைகளும், மரச்சாமான்களும், விளையாட்டுச் சாமான்களுமாக, எங்கே பார்த்தாலும் அவர் பெயரே விளங்கிற்று. அவர் பிறந்த வீடு, நீராப்பக்ஷம் பழுதுபார்க்கப் படுவதன்றி, அவர் காலத்தி லிருந்தது போலவே இன்னு மிருக்கிறது. நடுத்தெருவில், நாகரிகமாய்க் கட்டப்பட்ட மற்ற வீடுகளுக்கு மத்தியில், அது ஒரு கொட்டகை போலத் தோன்றுகிறது. அவர் சரித்திரத்தைச் சார்ந்த அருமையான பத்திரங்களும் புஸ்தகங்களும் அங்குள்ள அறைகளில் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன; மாடியில் அவர் பிறந்த அறையில் அவர் படம் ஒன்று மட்டுந்தான் வைத்திருக்கிறது. இப்பொழுது போலக் கூட்டம் கூட்டமா யன்றி, முதலில் வெகு சிலரே அவ் விடத்துக்கு யாத்திரை செய்தவர்கள். ஸ்காட், பைரன், ப்ரௌனிங் முதலிய புலவர்களும், சாதாரண ஜனங்களும், தங்கள் பெயர்களை அவ்வறையின் சுவர்களிலும் ஜன்னல் கண்ணாடிகளிலும், எழுதி வைத்துவிட்டுப் போனார்கள். நாளடைவில் யாத்திரிகளின் கோஷ்டி அதிகரிக்கவே, எல்லோரும் தங்கள் பெயர்களை ஒரு கையொப்பப் புஸ்தகத்தில் எழுதிவைக்க வேண்டுமென்றும், அவ்வீட்டை ஒருவிதத்திலும் பங்கம் செய்யக் கூடாதென்றும், அதிகாரிகள் விளம்பரம் செய்ய வேண்டிய தாயிற்று. அவ்வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்தில், ஷேக்ஸ்பியர் நூல்களிற் சொல்லியுள்ள எல்லாப் பூக்களின் செடிகளையும் வைத்து வளர்க்கிறார்களாம்.

அங்கிருந்து சிலர், ஷேக்ஸ்பியர் மனைவியார் பிறந்த வீட்டைப் பார்க்கப் போனார்கள்; நான் அங்கே போகவில்லை. ஷேக்ஸ்பியர், தன் சொந்தச் சம்பாத்தியத்தைக் கொண்டு வாங்கின 'புது வீட்டில்' உள்ள 'மூஸியத்தை'ப் பார்த்துவிட்டு, ஞாபகச்சின்னக் கட்டடத்துக்குப் போனேன். அக்கட்டடம் புஸ்தகசாலை, சித்திரசாலை, நாடகசாலையாகிய மூன்று பிரிவுகள் அடங்கியது; அங்குள்ள அதிகாரிகளில் ஒருவர், இந்தியர்கள் ஷேக்ஸ்பியரை வெகுவாய்க் கொண்டாடப் பட்டவர்க ளென்று தனக்குத் தெரியுமென்று சொல்லி, அங்குள்ள விசேஷங்களை யெல்லாம்



இன்ன இன்னவென்று எனக்குத் தெரியக் காண்பித்தார். அன்று மத்தியானம் நாடகசாலையில் ஆடிக்காட்டிய "ரிச்சார்ட் அரசனின் கதை" ஷேக்ஸ்பியர் நாடகங்களில் பேர்போன தில்லை; அவர் பாலியத்தில் எழுதியது; எனினும், அவர் கவி வன்மையும், நடிப்பவரின் சாமார்த்தியமும் நேர்ந்ததின் பலனாக, நாங்கள் நாடகத்தைப் பார்த்துப் பரவசமானோம். பிறகு அவ்வூர்ச் சர்ச்சுக்குப்போய், ஷேக்ஸ்பியர் உடலை அடக்கம் செய்துள்ள இடத்தைச் சுற்றிக் கட்டியிருக்கும் கயிற்றுக்கப்பால் நின்றுகொண்டு, அவர் பிரதிமையையும், புதையலிடத்தின்மேல் எழுதியுள்ள 'கல்லாதான் கற்ற கவி' போன்ற வசனங்களையும், பார்த்தோம். 'பொய்யுடம்பு மாறிப் புகழுடம்பு பெற்றான்" என்ற சொற்களின் கருத்து, அப்பொழுது எனக்குத் தெளிவாய்த் தெரிந்தது. அன்றுதான் ஷேக்ஸ்பியர் கொண்டாட்டம் கடைசி நாள் ஆனதாலும், அன்றிரவு நடிக்கப்படப்போகும் "நடுவேனிலிரவுக்கனா" என்னும் நாடகத்தைப் பார்க்கவேண்டியும், வெகுஜனங்கள் அவ்வூரில் இராத்தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள்; நாங்களோ, சாயந்திரம் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, இராத்திரி ஆக்ஸ்போர்டு வந்து சேர்ந்தோம்.

சில நாள் கழித்து, நான் மறுபடியும் முன்னிருந்த கிராமத்துக்குப் போனேன். அப்பொழுது வேனிற்காலம் ஒடுங்கி, முடிவாய் விட்டது. "இன்று வெகு சீக்கிரம் இருட்டிவிட்டதே" என்று, அன்றுதான் கண்ட அதிசயம் போல, நாங்கள் தினம் சொல்லத் தொடங்கினோம். சில வேளைகளில், இரவில், டிசம்பர் மாசத்திற் போலக் குளிர ஆரம்பித்தது. குளிரை முன்கொண்டு வரவேற்கலாகாது என்ற அஞ்ஞானத்தைக் கைப்பிடித்து, அவ்வூரார், கணப்பிடத்தைத் துலக்கி மினுக்கி, அதின் பளபளப்பைக் கண்டு மகிழ்ந்துகொண்டு, அதில் நெருப்பு மூட்டப்போகும் நாளைத் தள்ளிவைத்துக்கொண்டே வந்தார்கள். அவர்கள் பொறுமையால் இந்த வருஷம் குளிர் மட்டுப் படுவதா யிருந்தால், எல்லாருக்கும் நலம்தானே. ரஜா முடிந்து விட்டதால் அவ்வூரில் எனக்குத் தெரிந்த ஜனங்களிடம் சொல்லிக் கொண்டு, நான் லண்டனுக்கு வந்து சில நாளாகிறது. 'எலெக்ஷனை'த் தவிர இங்கு வேறு விசேஷமொன்றுமில்லை.

# கம்ப ராமாயண இன்கவித் திரட்டு *

(789-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீ.வே.ப. சுப்பிரமணிய முதலியார், G.B.V C., வெள்ளக்கால்.



அவன் அப்பாற் போம்போது, கடல் மற்றொரு கடலைப் பெற்றுவிடப், பெற்ற கடலின் மீது பிறந்த கடல் தோன்றுதல் போலக், கரிய பெரிய உருவமுள்ள அங்கார தாரை யென்னும் அரக்கி யெழுந்து, யாருடைய நிழல் கிட்டினும் அதைப்பற்றி அவரை யிழுக்கும் தன் வர பலத்தினால் அநுமானை நிழல்பற்றி யிழுத்து "என்னைக் கடந்து செல்பவன் ஆரடா!" என்று அதட்ட, அவன் "அண்டத்துக்கு உறை போன்ற உன் வாய்வழி யல்லது வேறுவழி யில்லையாம்படி வானவழி யடைத்த நீ ஆர்?" என, "இயமன் உன்னைக் காக்க வந்தாலும், யான் உன்னைத் தின்னும் விருப்பை நிறைவேறாமற் றடுக்க முடியாது" என்றாள்.

9. திறந்தாள் எயிற்றைஅவள், அண்ணல்இடை சென்றான்:
அறந்தான் அரற்றிய(து;) அயர்த்தமரர் எய்த்தார்;
இறந்தான் எனக்கொ(டு,)ஓர் இமைப்பதனின் முன்னம்
பிறந்தான் எனப்,பெரிய கோளரி பெயர்ந்தான்.

இ - ள். (மேற் கூறியவாறு சொன்ன) அவள் வாயைத் திறந்தாள். அநுமான் (அதன்) ஊடே சென்றான். அவன் இறந்தானென் றெண்ணிக்கொண்டு, தரும தேவதை அழுது புலம்பியது; தேவர்கள் சோர்ந்து வாடினார்கள். (அப்போது அவன்) இமைப் பொழுதுள்ளாக (ச்செத்துத் திரும்பப்) பிறந்தவன்போல (அவள் வயிற்றைக் கிழித்து) வெளியானான்.

எயிறு–பல், இலக்கணையாக அதனோடு சம்பந்த முடைய வாயைக் குறித்தது. எனக்கொடு—என் றெண்ணிக்கொண்டு. கோளரி–சிங்கம். 'அவள் எயிற்றைத் திறந்தாள்' என மாற்றுக. 'இறந்தான் எனக்கொடு அறந்தான் அரற்றியது' எனக் கூட்டுக.

நரசிங்கம் தூணைப்பிளந்து வெளிப்பட்டாற் போல அநுமான் அரக்கி வயிற்றைப் பிளந்து வெளிப்பட்டானென்றும் இறுதி அடிக்குப் பொருள் கூறுவர்.

10. சாகா வரத்தலைவ ரில்திலகம் அன்னான்,
ஏகா, அரக்கிகுடர் கொண்டுடன் எழுந்தான்;
மாகால் அசைப்ப,வடம் மண்ணின்உற, வாலோ
டாகாயம் உற்றகத லிக்குவமை ஆனான்.







இ - ள். அநுமான் அங்கார தாரையின் குடலைப் பிடுங்கிக்கொண்டு உயர எழுந்தான். (அப்போது அவன்,) கயிறு தரையிலே (தொடர் புற்றுக்) கிடக்க, வாலோடு ஆகாயத்தை அடைந்த காற்றாடி போன்றான்.

சாகாவரத்தலைவர்—சாகாவரம்பெற்ற சிரேட்டராகிய சிரஞ்சீவியர் எழுவர். ஏகா—(அரக்கிவாய்க்குள்) ஏகி. குடர்–குடல். மா—பெருமை. கால்—காற்று. வடம்—கயிறு. கதலி–காற்றாடி.

அநுமான் காற்றாடிப் பட்டத்துக்கும், அவன் வால் அதன் வாலுக்கும், அரக்கி குடல் அதன் கயிற்றுக்கும், பிடுங்கப்பட்ட குடலுடன் தொடர் புடையதாய் அவள் வயிற்றில் எஞ்சி யிருந்த குடற்பகுதி மேலே போனது போக்த் தரையிற் கிடக்கும் கயிற்றுப் பகுதிக்கும் ஒப்பு.

[அவ்வாறு ஆகாய வழியே போன அநுமான், இலங்கா நகரத்துக்கு அடுத்திருந்த பவளமலைமேற் பாய்ந்தான் அவன் பாய்ந்ததனால் அலைந்து தள்ளாடிய அந்த மலை, புயற்காற்று மோதப்பட்ட கப்பல் போன்றது]

11. மண்அடி உற்றுமீது வான்உற வரம்பின் தன்மை
எண்அடி உற்ற குன்றத் தலத்துநின் றெய்த நோக்கி,
விண்இடை உலகமென்னும் மெல்லியல், மேனிநோக்கக்,
கண்ணடி வைத்ததன்ன இலங்கையைத் தெரியக்கண்டான்

இ - ள். (தனது) அடிப்பாகம் பூமியில் (மிகத்தாழ்வான கீழ்ப் பூமிவரை) பொருந்தி மேற்பாகம் ஆகாயத்தில் (உச்சிவரை) உற்றதனால் (உலகத்தின் மேல் கீழ்) எல்லை நிலைமையை மதிப்பிடுகின்றான் போன்றதும் (அநுமானது) பாதம் தங்கியதுமான (அந்தப் பவள) மலைமேல் அவன் நின்று, வானத்தில் உள்ள தேவலோகமாகிய பெண் தன் வடிவழகைப் பார்க்க வைத்த கண்ணாடி போன்ற—எனவே தேவலோகத்தின் பிரதிபிம்ப மென்று சொல்லும்படியான அழகுடைய—இலங்கையை (நன்றாகக்) கூர்ந்து நோக்கி (அது துலக்கமாகத்) தெரியக் கண்டான்.

அடி, மண் உற்று என மாற்றுக. எண்ணல்—மதிப்பிடுதல். எய்த நோக்கி-(கண்பார்வை, பார்க்கப்படும் பொருளில் நன்றாகப்) பொருந்தப் பார்த்து. 'அடியுற்ற' என்பதற்கு, "இலங்கைக்கு முன்னடியிலுள்ள" என்றலும் ஒன்று.

மதில் சூழ்ந்த மாவிந்த நகரமும் அதனைச் சூழ்ந்த அகழியும் அதனைச் சூழ்ந்த தரையும் முறையே ஒரு தடாகத்திலே தோன்றும் தேவநகரின் பிரதிபிம்பத்தையும் அதனைச் சூழ்ந்த நீர்ப் பகுதியையும் அதனைச்சூழ்ந்த கரையையும் போலும் என்ற கருத்துக்கொண்ட 'குட்வளைக் குலம்' என்னும் நைடதப் பாட்டை இப் பாட்டு நினைவுகூரச் செய்கின்றது.

12. நன்னக ரதனைநோக்கி, நளினக்கை மறித்து'நாகர்
பொன்னகர் இதனைஒக்கும்' என்பது புல்லிதம்மா!
அந்நகர் இதனின்நன்றே? அண்டத்தைமுழுதும் ஆள்வான்
இந்நகர் இருந்துவாழ்வான் ; இதுஅதற்கேது' என்ருன்.

இ - ள். (அவன் அந்த) இலங்காபுரியைப் பார்த்து (ஆச்சரியத்தால்) கையை மடக்கினவனுய், ('இப்பெண் இலக்குமி போல்வாள்' என்பதிற்போல, உவமேயப் பொருளுக்கு அதனினும் சிறநத பொருளேயே உவமான மாகக் கூறல் முறை யாதலால், அதற்கு மாருக) 'இந்நகர் பொன்னக ரொக்கும் என்பது மதியீனம். (இம்மதியீனம் இருந்தவாறு என்னே! ஆச்சரியம்! மெய்யாக அந்த நகரம் (இந்த நகரத்துக்கு உவமான மாகுதற்கு) இந்த நகரத்தினும் அதிக அழகுடையதோ? (இல்லை) [தேவர் உலகு உள்பட] உலகங்க ளனைத்தையும் ஆளும் இராவணன் இந் நகரிலிருந்து வாழ்கின்ருன். இது—அவன் இந்நகரை இராசதானியாகக் கொண்டு வாழ்வது—அதற்கு —அந்நகர் இந்நகரினும் அழகுடைய தன்று என்பதற்குக்—காரணமாகு மென்று எண்ணினன்.

நல்—அழகிய. நன்று—அழகியது. (நன்மை—அழகு. புறப்பொருள் வெண்பாமாலை). நளினம் — தாமரை. நாகர் — தேவர். புல்லிது—ஈனமானது. மதியீனமானது என்ற குறிப்புப் பொருள் கொள்ள நின்றது. 'இது பொன்னகரை ஒக்கும்' எனவும் 'அண்டம் முழுதையும்' எனவும் விகுதி பிரித்துக் கூட்டுக. என்ருன்—என்றெண்ணினன்.

சுருங்கிய சொற்களால் விரிந்த பொருள் விளங்க 'இது அதற்கு ஏது' என்ற நயம் நோக்கத்தக்கது.

13. மாண்டதோர் நலத்திற்ருமேன் றுணர்த்துதல் வாய்மைத்தன்ருல்
வேண்டிய வேண்டின்எய்தி, வெறுப்பின்றி விழைந்த துய்க்கும்
ஈண்டரும் போகஇன்பம் ஈறிலதியாண்டுக் கண்டாம்?,
ஆண்டது துறக்கம் ; அஃதே அருமறைத்துணிவும் அம்மா

இ - ள். ('மேற் கூறிய இரண்டு நகரங்களுள்ளே பொன்னகரானது) மாட்சிமைப்பட்டது ; ஒப்பற்ற இன்பம் (தருதலை) உடையது ;' என்று சொல்வது உண்மை யுடையதன்று ; (பொய்யே ; ஏனெனில், இப்போது அங்குள்ள தேவர்கள் இராவணனுற் செயிக்கப் பட்டவராய்த் துன்புற் றிருக்கின்றனர். எல்லாரும்) விரும்பப்பட்ட பொருள்களை (எப்போதேனும்) விரும்பினல், (அப்போது) அடைந்து (அவ்வாறு) விரும்பி அடைந்த பொருள்களைத் தெவிட்டுத லில்லாமல் அநுபவிக்கின்ற, (பிற இடங்களில்) கிட்டாத அநுபோக சுகம் முடிவில்லா திருப்பதை எவ்விடத்துக் காண்கின்ருேமோ, அவ்விடமே சுவர்க்கமாம். அருமையான வேதங்களின் சித்தாந்தமும் அதுவே யாம்,



(ஆதலால், தேவர்கள் துன்பங்களை அநுபவிக்கும் பொன்னகர் சுவர்க்கமன்று ; இராக்கதர் எல்லாப் போகங்களையும் அநுபவிக்கும் இலங்கா நகரே சுவர்க்கமா மென்று அநுமான் எண்ணினன்.)

மாண்டது—மாட்சிமைப்பட்டது. ஓர்—ஒப்பற்ற. நலம்—இன்பம். நலத்திற்று—இன்பமுடையது. உணர்த்தல்—தெரிவித்தல், சொல்வதைக் குறித்தது. வாய்மைத்து — உண்மை யுடையது. ஆல் அசை. வேண்டிய—வேண்டியவை—விரும்பப்பட்ட பொருள்கள். வெறுப்பு - தெவிட்டுதல். விழைந்த — விரும்பப் பட்டவை. 'விழைந்த (வைகளை) வெறுப் பின்றித்துய்க்கும்' எனக் கூட்டுக. ஈண்டு (தல்) அரும் — நெருங்குதற்கரிய — கிட்டாத. யாண்டு—எவ்விடம். ஆண்டு—அவ்விடம். ஆண்டது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. முன்பாட்டின் முடிவிலுள்ள 'என்ருன்' என்பதை இப்பாட்டின் முடிவிலும் வருவித்துப்பொருள் முடிவுசெய்க.

முந்திய பாட்டில் 'பொன்னகர்' 'இலங்கை' யென ஒன்றற்கொன்றெதிராகக் கூறப்பட்ட நகரங்களுள் முன்னதை இப்பாட்டில் முதலடியிலும் பின்னதை ஏனைய மூன்றடிகளினும் குறிப்பித்தார். (தொடரும்)

---

# வேடிக்கை விநோதம்

தமாஸ்தா:—வாருங்கள், ஒரு கட்சிக்காரன் வந்திருக்கிருன்.
வக்கீல்:—அப்படியா! வா, வேகம் போவோம், வா.
தமாஸ்தா:—அப்படி அவசர மில்லை ; அவன் தப்ப முடியாது ; உள்ளே வைத்துப் பூட்டிவிட்டு வந்தேன்.

---

முதல் மனிதன்:—தீக்குச்சி இருந்தால் தாரும்.
2-ம் மனிதன்:—இந்தாரும்.
முதல் மனிதன்: —(தன் அங்கிப் பையைத் தேடிவிட்டு) சுருட்டைமறந்து விட்டேன், ஒரு சுருட்டிருந்தால் தாரும்.
2-ம் மனிதன்:—சுருட்டுக் கொடுக்க முடியாது ; நெருப்புக் குச்சியைத் திரும்பத் தந்துவிடும்.

---

குழந்தை:—அம்மா! இது தானு இன்று பிறந்த என் தம்பி?
தாய்:—ஆம் ; சுவாமி உனக்குத் துணையாக அனுப்பினர்.
குழந்தை:—அம்மா! பல்லு மில்லை தலைமயிரு மில்லையே? வெறுங்கிழமே இது! சுவாமி உன்னை ஏமாற்றிவிட்டார்.

---

ஸ்ரீராமன்:—அதிகாலையில் எழுந்திருப்பது நலம், சில வேளை இலாபமும் உண்டு ; நேற்றுக் காலை, பாதையில் ஒரு பணப்பை கிடந்தெடுத்தேன்.
லக்ஷ்மணன்:—உனக்கும் முன்பு எழுந்தவன் தானே அதை இழந்திருக்க வேண்டும்? அவனுக்கென்ன லாபம்?

---

நியாயாதிபதி:—நான் நியாயாதிபதியா? அல்லது நீரா?
வக்கீல்:—நானில்லை ; நீங்கள் தான்.
நியாயாதிபதி:—பின்னையேன் இப்படி முட்டாளைப்போல் நீர் பேசுகிறீர்?

## பத்திராதிபர் குறிப்புக்கள்

(800-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

(54) மகாத்மா காந்தியின் காங்கிரஸ் பிரசங்கம்.—இதில் முக்கிய பாகங்களை இக்காசில் காணலாம். பிரிட்டிஷாரின் அரசாங்கத்தைப் "பைசாசத் தன்மையது" என்று கூறினவர், அவர்கள் மட்டும் பேச்சுப்படி யோக்கியமாய் நடந்தால், "பிரட்டிஷ் ஏகாதிபத்தியத்துக் குட்பட்டுச் சுயராஜ்யமடையப் பிரயாசைப்பட நான் விரும்புகிறேன்" என்று, இன்னும் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. ஆனால், பிரிட்டிஷார் அவ்வண்ணம் ஒழுகும் குறிகள் ஒன்றையும் காணாததோடு, 1919-ம் வருஷத்துச் சீர்திருத்தங்களை ரத்து செய்வதாகவும் பேச்சுப் பிறந்துவிட்டது.... காந்தியின் சுயராஜ்ய யுக்திகளில், அகில இந்தியா பாஷை ஹிந்துஸ்தானியாயும், பிறநாடுகளோடு இந்தியா உறவாடும் பாஷை இங்கிலீஷாயும் இருக்கவேண்டும் என்கிறார். சென்னை ராஜதானியி லுள்ள பாஷைகளின் குழப்பத்தை நன்கு அறியாதவர் யோசனையே இது. அகில இந்தியாவின் பாஷை ஹிந்துஸ்தானியா யன்றி, இங்கிலீஷா யிருப்பதே சுலபம், பெரும்பயன் தரவல்லது, என்று கூறின், தேசபக்தி யில்லாதவ னென்று குறைகூறுவர் பலர். அதற்குப் பயந்து உண்மையை மறைக்க ஒண்ணாது. அதுவுமன்றி, யார் என்ன சொல்லினும், முடிவில் இங்கிலீஷ் பாஷையே பொதுப்பாஷையாகி நிலைநிற்கும் என்பது திண்ணம்......மகாத்மா தீண்டாமையைப் பற்றிக் கூறும் மொழிகளை, அவர் தொண்டரெனப் பிதற்றித் திரியும் எல்லோரும் உட்கொண்டு ஒழுகுவராயின், நாடு அதிசீக்கிரத்தில் முன்னேற்றமடையும்.

(55) Rev. D. G. M. லீத், M.A.—27-12-24-ல் இவர் எண்ணூரில் மூழ்கி யிறந்தது, நமது ராஜதானியின் துர்ப்பாக்கியமே. கிறிஸ்துமத போதகர் பல்லாயிரவர் வந்து நம் நாட்டில் பல நன்மைகள் செய்திருக்கின்றனர், இன்னும் செய்து வருகின்றனர். ஆயினும், அவரிற் பலர் முயற்சிக்கு, மதப்பற்றோ, ஜீவனோபாயமோதான், அடிப்படையாயிருக்கும்; இந்தியரைத் தமக்கு எல்லாவிதத்திலும் சமானராக நினைத்து, அவர் நடத்துவதில்லை. மற்றெல்லா உயிர்கள் மீதும் காருண்யம் கொண்டொழுகும்





காரணத்தால், அத்தகைய அறவோரே அந்தணர் என்பது உண்மையாயின், லீத், ஒரு சிறந்த அந்தணரே. சென்னை நகரிலே ஏழை ஜனங்களின் கஷ்டநிஷ்டூரங்களை நிவர்த்திக்கும் பொருட்டும், மதுவிலக்கின் பொருட்டும், அவர் ஓய்வொழி வின்றிப் பாடுபட்டு வந்தனர். உலக அமைப்பிலே ஒவ்வொன்றுக்கும் ஓர் அவசியம் இருப்பதாகக் கொள்வதொன்று; எதுவுமே இன்றியமையாத தன்று என்று கொள்வது மற்றொன்று. ஆயினும், மக்களுக்குரிய சிற்றறிவுக் கெட்டியவரை உலக அமைப்பைப்பற்றிக் கூறுதல் பொருந்துமெனின், சென்னைமாநகரம் இழக்க ஒண்ணாதசிச் சில மகான்களில், லீத் ஒருவ ரென்று திட்டமாய்க் கூறலாம். "இருந்தென்? இறந்தென்?" என்னும்படி எத்தனையோ மக்கள் காலந்தள்ளிவர, திடீரென இடி விழுந்தாற்போல, இவர் இறந்தது நமது துர்ப்பாக்கியமே.

(56) இந்தியன் ரிவ்யூ-வெள்ளி ஜூபிலீ:—நண்பர் கனம். ஜி. ஏ. நடேசையர் இப்பத்திரிகையைத் தொடங்கி 25 ஆண்டுகள் நிறைவேறிய மங்கள நிகழ்ச்சி, இப்பொழுது கொண்டாடப் பெறும். சர்க்கார்ச் சேவகமே கதியாகப் படித்தோர் பலரும் மதித்து நடந்த நாளிலே, அவர் அவ்வழிச் செல்லாது, புதிய வழியை நாடிப் புகுந்தார். அப்படி அவர் செய்த செயலுக்கு இரங்க நேராது, அவரும் நாடும் பெரும்பயன் அடையும்படி, அச் செயல் இனிது நிறைவேறியது, யாவரும் பாராட்டிக் கொண்டாடத் தக்க தொன்றே. இந்தியன் ரிவியூ பத்திரிகை மூலமாயும், மிகப்பல புஸ்தகப் பிரசுரங்கள் மூலமாயும், கனம். நடேசன் நாட்டுக்குப் பெருந்தொண்டு செய்திருக்கிறார்; அவை காரணமாகவே, பெருஞ்செல்வத்தையும், இந்தியா ஸ்டேட் கவுன்ஸிலில் அங்கத்தின ரென்னும் உன்னத பதவியையும் அவர் அடைந் திருக்கிறார்; தன்னை வியன்றவரை, தன் மனப்போக்குப்படி, பொது நன்மைக்காக உழைத்து வருகிறார். இவ்வாறே, அவரும் அவர் பத்திரிகையும் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து பயன் செய்வாராக!

(57) லாலா லஜபதிராய்:—இவர், இக்காலத்தில் இந்தியாவில் விளங்கும் தேசபக்தர்களுள், அறிவினுலும், நாட்டுக்குச் செய்துள்ள அரும்பெருந் தொண்டினுலும், உலகெலாந் திரிந்துற்ற பல திறப்பட்ட அநுபவ ஞானத்தினுலும், நாட்டின் பொருட்டுத் தான் பட்ட கஷ்டங்களினுலும் செய்த தியாகங்களினுலும், நிலைகலங்கா மனோதீரத்தினுலும், எவ்விதத்தினும் எவரினும் பின்படாத உத்தமர். மற்றவர் பலரைப்போல், தற்பெருமை, குறுகிய

நோக்கம், வைராக்கியம், அமிதமான ராகத்துவேஷங்கள், குதர்க்கக் கொள்கைகள், எதுவுமே இல்லாத, நிதான புத்தியுள்ள மஹான். பல அம்சங்களில், இவரே மற்றெல்லா ஜனநாயகர்களிலும் சிறந்தவரென்று சொல்லலாம். காங்கிரஸ் கலைந்தபின் இவர் புதுச்சேரி வந்து ஸ்ரீ அரவிந்த கோஷரைக் கண்டு திரும்பினார். மார்க்கத்தில் சென்னையில் சில பிரசங்கங்கள் செய்தார். இதுகாறும் இவரை நேரில் கண்டு கேட்டறியாத சென்னை வாசிகள், இவர் தீரமொழிகளைக் கேட்டு, முன்னிலும் மிக்க மதிப்பையும் பிரீதியையும் இவர்பால் அடைந்தனர். இப்படிப்பட்ட அறிவாளர், இந்தச் சமயத்தில், முஸ்லீம்களைப் போல ஹிந்துக்களும் தனிச்சபை கூட்டித் தம் மதத்தார்க்குரிய உரிமைகளைப் பாதுகாத்து வலியுறவேண்டுமென்று கூறுவது, நாட்டிலே சாதி மதம்பற்றிவரும் ராகத் துவேஷங்கள் எவ்வளவு பலத்துவிட்டன என்பதை விளக்கும். ஒற்றுமையுணர்ச்சியோடு இருபெருஞ் சமூகத்தாரும் சேர்ந்துழைத்துச் சுயராஜ்யம் பெறுவது எந்நாளோ!

(58) ஆசாரச் சீர்திருத்தக் கூட்டங்கள்.—இவ்வாண்டிலே பெல்காமிலும் லக்ஷ்மணபுரியிலும் இரு கூட்டங்கள் நிகழ்ந்தன. சபாநாயகர் இருவருமே, இவ்வாண்டில், பெண்களின் முன்னேற்றத்தையும் உரிமைகளையும் பற்றியே விசேஷமாய்ப் பேசினர். பெல்காமிற் பேசிய ஸர். ஸி. சங்கரன் நாயர், பெண்கள் சரீரப் பாடுபட்டு ஆண்களோடு வாழ்க்கைப் போரில் போட்டி செய் துழைத்து, தம் ஜீவனத்தைத் தாமே சம்பாதித்துச் சுதந்திரமாய் வாழ்வதென்பதின்றி, நம் முன்னோர்களின் கொள்கைப்படி, பிரஜோத்பத்தியும் சம்ரக்ஷணையுமே தம் முக்கிய கடமைகளாகக் கொண்டு, ஆண்களால் பேணிப் போஷிக்கப்பட்டு வாழ்வதே சரி என்று கூறினர். வாழ்க்கைக் குறிக்கோள்கள் மாறுபடும் இந்நாளிலே, இவ்விஷயம் இருபாலாரும் ஆழ்ந்து ஆலோசித்தற் குரியது. லக்ஷ்மணபுரிக் கூட்டத்தில், இல்லற வாழ்க்கையிலே, மனைவிகளை விலக்கி வைக்கும் உரிமை கணவருக் கிருப்பதுபோலவே, சட்டப்படி, மனைவிகளுக்கும் தம் கணவரை விலக்கும் சுதந்திரம் இருக்கவேண்டுமென்று வாதிக்கப் பட்டது. ஹிந்துக்கள் சட்டத்திலே இது கிடையாது; ஆயின், இதை யேற்படுத்துவதும், ஏகதார நியமத்தை ஏற்படுத்துவதும், அவசியம் என்பது, சில அறிவாளர் கொள்கை. இதுவும் இருபாலாரின் தீர்க்காலோசனைக் குரியது. "ஏறுமாறுன" இல்வாழ்க்கையைவிடச் சந்நியாசமே சிலாக்கிய மன்றோ?

அ. மாதவையர்.

SUPPLEMENT TO THIS ISSUE

## Mr. A. MADHAVIAH'S ENGLISH WORKS

I. **Thillai Govindan**—With an Introduction by Frederic Harrison—English edition on F. W. paper by FISHER UNWIN—PRICE 2|6—REDUCED TO *One Rupee.*

*Some Opinions*—(1) *F. H.*—"This remarkable little book—It is beautifully written—a fascinating picture" (2) *Sir F. A. Nicholson, K.C.S.I.*—"The book is most interesting" (3) *R.E. Holland I.C.S.*—"It is the only book I have come across which gives one a real insight into Native life" (4) *M. C. C. Mag.*—Whoever wrote this had genius—It is the most life-like picture of Modern Indian Life···Repeatedly recalls Thackeray to one's mind" (5) *I. S. R.*—"One of the most scathing exposures of much which passes for religion and morality among us." (6) *The Englishman*: "The memoir is certainly worth reading."

II. **Satyananda**—An entrancing Social Novel—*One Rupee. Some Opinions*—(1) *Frederic Harrison*—"I have now read carefully with very great pleasure and admiration—I have found it intensely interesting—it is a production of very remarkable originality and power" (2) *Madras Mail*—"The Novel is remarkable in many ways and ought to find a wide circle of readers."

III. **Clarinda**—A Historical Novel of South India in the latter part of the 18th century—Price Re. 1-8-0.

IV. **Muthumeenakshi**—The Autobiography of a Brahmin girl—Translated from the Tamil original by the Author's daughter—With an Introduction by SIR C. SANKARAN NAIR—Price··· 0—10—0

IV. **Lieut. Panju: A Modern Indian**:

A most fascinating Novel-Revised 2nd edn. 1 Re.

*Some Opinions*—(1) *The Daily Express*: "......what is wanted is not mere imitation novels of the Western type, but real, original productions of the indigenous variety, with Indian characters faithfully drawn and fully developed and with original plots scientifically and artistically constructed, and bearing reference to Indian Society as it ought to be. We have before us now a book of this description by one who may not be unfamiliar to our readers, Mr. A. Madhaviah.*** A striking feature of the book to us is the extraordinary extent to which it has succeeded in being true to life......The price of one rupee is by no means high." (2) *United India and Native States*: "The language is pure and simple, with a pleasant idiomatic flow showing literary perfection.***The hero's chaste life and scrupulous adherence to ideals and subsequent sacrifice are of absorbing interest." (3) *The Indian Review*,

"a Kusika's story on a bigger canvass**no better book on domestic reform could be placed in the hands of our ladies."

## VI. Kusika's Short Stories

*Revised Second Edition*

| | | | | |
|---|---|---|---|---|
| Part I. 15 Stories | ... | 0 | 12 | 0 |
| Part II. 12 ,, | ... | 0 | 8 | 0 |
| Both parts together----27 Stories | ... | 1 | 0 | 0 |

1. *The Indian Review*: "Kusika's stories are among the classics of their kind, full of graphic and amusing pictures of South Indian life, as vivid and instructive as anything yet attempted in this side of India." (2) *The Indian Bookman*: "......Incisive descriptions of modern South Indian life and customs, recognised for many years as of unusual merit. Mr. Madhaviah has the gift of vivid characterisation...." (3) *The late Mr. S. Kasturiranga Iyengar* Editor of the *Hindu*: "...graphic and amusing pictures...The pictures of life which are drawn are vivid, interesting and written in the attractive style characterestic of the author...most of them true to life in the main incidents." (4) *The late Mr. Diwan Bahadur V. Nagamayya*: "I am reading........with admiration. I have translated them to my wife and daughters and we talked and discussed and enjoyed the stories like anything. They are magnificent" (5) *Sir P. S. Sivaswami Aiyer*: "Enjoyed it immensely. It is capitally written, full of humour, and is a very graphic description of the woes of parents of girls." (6) *United India and Native States*: "The descriptions given are vivid and life-like and reveal the author's powers of intellect and analysis."

*Note.*—Tamil translation by the Author of 22 of these stories—Wrapper Rs. 1 8 0; Duxeen binding Rs. 1 12 0.

## VII. THE BALLAD OF THE PENNILESS BRIDE

PRICE: AS. 4 ONLY

OPINIONS: *Sir C. Sankaran Nair*:—"It is done remarkably well. * * * * *Sir N. G. Chandavarkar*:—"........I have read it with interest and hope it will stir the conscience of those groaning under the evil you have well exposed." *The Modern Review*:—"........this pathetic little poem draws attention to the baneful custom of exacting dowries........The poem is worth reading."

*The Social Reform Advocate*:—"........a beautiful poem......" *United India and Native States*:—"......perfect as a work of art.........an act of public benefaction."

## VIII. MANIMEKALAI—(*Tamil Classics for English Readers Series*)—ONE RUPEE.



## IX. NANDA—The Pariah who overcame Caste.

—*Illustrated*—9 ANNAS.

## X. MARKANDEYA—The Youth who conquered Fate—*Illustrated*—5 ANNAS.

## XI. The Story of the Ramayana—Retold in a simple, straight manner, with Map and Glossary—Revised 2nd Edn. Re. 1; Abridged Edn. for III+IV Forms-10 As.

*Sir P. S. Sivaswami Aiyer K. C. S. I., C. I. E.*, * * "The moral education of the young is a problem which has come to the front in this century and has been engaging the attention of the educational world and the public. Opinion is divided to some extent as to the possibility and advantage of direct moral instruction. A good story well told is of greater value especially to the young than a dry statement or discussion of moral maxims. And ideals drawn from the national literature of a civilised people necessarily have a greater educative effect than those borrowed from foreign sources. No apology is therefore needed for this book which Mr. Madhaviah has written for the benefit of the school-going youth of this country. He is no novice as an author. By his fine culture and his previous essays in the field of literature Mr. Madhaviah is well equipped for the task he has undertaken. The book is written in a pleasant, flowing and attractive style specially suited to the young reader he has succeeded in producing an eminently readable and delightful story which will serve to implant in youthful minds a love of the lofty ideals portrayed in the immortal epic."

*Dr. Sir S. Subrahmania Iyer*:—"No Indian youth loving his land and its ancient tradition and greatness should fail to read and profit by this most pleasant book."

*The Rt. Hon'ble Mr. V. S. Srinivasa Sastri, P. C.*,—"Teachers throughout India will find in it an effective means not only of teaching English composition, but of training the emotions and inculcating high ideals of duty."

*The Hon'ble Mr. Justice T. V. Seshagiri Iyer*:—"The English garb in which Mr. Madhaviah has clothed his tale should enable Indian Managers of aided institutions to prescribe its study as part of the course of instruction in their schools. The English of the book is excellent and there is absolutely no trace of sectarianism in it. Mr. Madhaviah has done excellent service to the cause of religious education in this country by bringing out this book."

*The Rev. Dr. William Miller, C. I. E.*:—"......Such acquaintance as I have thus made with the volume enables me to say that I think you have written in a style very

